## அவர்கள் காண்ட்வியை மிகவும் விரும்புவார்கள்





# டால்டாவில் தயாரித்தது

காரபண்டங்கள், தித்திப்புப் பண்டங்கள், வறுவல்கள், பொரியல்கள் மற்றும் பக்ஷணங்கள் யாவையும் டால்டாவில் தயாரித்தால் சிறந்த மணத்தையும், ருசியையும் பெறுவது திண்ணம். சுத்தமானதும், ஊட்டமளிப்பதுமான டால்டா எப்பொழுதும் புதிதாகவும், அப்புறவாகவும் சீல்செய்த டின்களில் உங்களிடம் வந்து சேருகிறது.




### இவ்வாறு தயாரிப்பது மிகவும் சுலபம்:—

ஒரு கப் மோர், கடலைமாவு, இஞ்சி, மஞ்சள் பொடி, உப்பு, தண்ணீர், சில சதைத்த பச்சை மிளகாய் இவைகளை ஒன்றாக கலந்துகொள்ளவும். மிருதுவான மாவுப்பதமாகும்வரை கொதிக்கவைக்கவும். சூடாயிருக்கும்போதே டால்டா தடவிய தட்டுகளில் கலவையை கனம் குறைவாக பரத்தி ஊற்றவும். 2 அங்குல அகலமுள்ள துண்டுகளாக வெட்டி டால்டாவில் தோய்த்த விரல்களின் நுனியால் சுருட்டவும். (சுருட்டுவதற்கு முன் சட்டினியை இலேசாக தடவிக்கொள்ளலாம்.) 1½ தேக்கரண்டி டால்டாவில் சிறிது மிளகாய் வற்றல், சிறிது கடுகு, ஒரு சிட்டிகை பெருங்காயம் இவைகளை வறுத்துத் தாளித்துக் கொட்டவும்.



**இதை தவற விடாதீர்கள்!**

புதிய டால்டா சமையல் புத்தகம் — ஆங்கிலத்தில் — படங்கள் கொண்டது — ஆர்ட் காகிதம் — 80 பக்கங்கள் — 300 தின்பண்டங்கள் செய்யும் முறைகள் — ஆரோக்கியம், சுகாதாரம், சமையலறை இவைகளைப் பற்றிய குறிப்புகள் — விலை ரூபாய் 1/- தான் — தபால் செலவு 8 அணா தனி.

டால்டா அட்வைசரி ஸர்வீஸ்
தபால் பெட்டி நெ. 353,
பம்பாய் 1

சமநிலை உணவில் உங்களுக்கு தேவையான கொழுப்பை அளிக்கிறது

HVM. 172-50 TM



# பொருளடக்கம்

மலர் 11 இதழ் 41 | 1952 மே 11 | நந்தன ௵ சித்திரை 29

பட்சிராஜாவின்

# காஞ்சனை

அமோகமான வரவேற்பு

சென்னை

பிரபாத், வெலிங்டன்

இரு தியேட்டர்களிலும்





மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 41

# மாகாணக் கமிட்டி மாறுதல்

சேலத்து முதுபெரும் காங்கிரஸ் கிழாரான டாக்டர் வரதராஜுலு நாயுடு ஓர் அருமையான விஷயத்தைத் தமிழ் மாகாண காங்கிரஸ் கூட்டத்தில் கூறினார். மாகாண காங்கிரஸ் தலைமையிலிருந்து ஸ்ரீ காமராஜ நாடார் விலகிக் கொள்ளும் சந்தர்ப்பத்தில் அந்த உண்மையை அவர் கூறினார். முன்னாளில் இம்மாகாணத்தில் 'மெட்ராஸ் மெயில்' என்னும் பத்திரிகை ஒன்று மட்டுமே நடந்து வந்ததாம். பிற்பாடு வேறு பத்திரிகைகள் தோன்றினவாம். ஆயினும் ஜனங்கள் பின்னர் வெகுகாலம் "பத்திரிகை வந்ததா?" என்று கேட்பதற்குப் பதிலாக "மெயில் வந்ததா?" என்று கேட்டு வந்தார்களாம். அதாவது 'பத்திரிகை என்றால் மெயில்தான்' என்பது ஜனங்கள் மனத்தில் அவ்வளவு நன்றாகப் பதிந்து போயிருந்தது.

அதுபோலவே ஸ்ரீ காமராஜ நாடார் மாகாணத் தலைமைப் பீடத்திலிருந்து விலகிக் கொண்டபோதிலும் தமிழ் மக்கள் "காங்கிரஸ்" என்றால் "காமராஜ நாடார்" என்றே வெகுகாலம் வரையில் கருதி வருவார்கள் என்றார் அந்தச் சேலத்துக் கிழார். புதிய தலைவர் டாக்டர் சுப்பராயன் பெயர் தெரிந்திருந்தாலும், சொல்லும்போது நாக்குழறி "ஸ்ரீ சுப்பராஜ நாடார் வந்திருக்கிறார்" என்று சொல்வார்களாம். இவ்வாறு டாக்டர் வரதராஜ நாடார்...அடடே! இந்தப் பேனாவின் கிறுக்கைப் பாருங்கள்! டாக்டர் வரதராஜுலு நாயுடு அவர்கள் மிகப் பொருத்தமாக ஸ்ரீ காமராஜ நாடாரின் காங்கிரஸ் தொண்டைப் பாராட்டிப் பேசினார். அவர் கூறியதில் பெரிதும் உண்மை உண்டு என்பதில் சந்தேகம் என்ன?

சிற்சில ஜில்லா போர்டுகளிலும் நகர சபைகளிலும் ஒரே தலைவர் பன்னிரண்டு வருஷ காலம் இருந்து நிர்வாகம் நடத்தியதைப் பார்த்தும் கேட்டும் இருக்கிறோம். அதிலெல்லாம் அவ்வளவு கஷ்டம் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குப் பன்னிரண்டு ஆண்டு இடைவிடாத தலைவராக இருந்து நிர்வாகம் நடத்திவருவது சாமான்யமான காரியமன்று. அதில் எவ்வளவோ கஷ்டங்கள் உண்டு. "என்னத்திற்காக நமக்கு இந்தத் தொல்லை? விட்டுத் தொலைப்போம்!" என்று பலரும் அலுப்படையக் கூடிய அளவுக்குக் கஷ்டங்கள் உண்டு. அவ்வளவையும் சமாளித்து அப்பதவியைத் திறம்பட வகித்து நிர்வாகம் நடத்தி வந்தார் ஸ்ரீ காமராஜ நாடார். தம்முடைய காலத்தில் இரண்டு மாபெரும் பொதுத் தேர்தல்களையும் நடத்தி வைத்தார். அத்தகையவர் கடைசியில் தாமாக முன்வந்து மாகாணத் தலைமையிலிருந்து விலகிக் கொண்டபோது பலரும் புகழுரை கூறியதில் வியப்பு ஒன்றுமில்லை.

ஆங்கிலக் கல்வி இல்லாமலே அரசியல் தலைமையை நன்கு வகிக்கலாம் என்பதைத் தமிழ் நாட்டில் மூவர் நிரூபித்திருக்கிறார்கள். ஒருவர், ஈரோடு ஸ்ரீ ஈ. வே. ராமசாமிப் பெரியார் அவர்கள். அடுத்தவர், ஓமந்தூர் ஸ்ரீ ராமசாமி ரெட்டியார் அவர்கள். மூன்றாமவர் ஸ்ரீ காமராஜ நாடார்தான். மூன்று பேரில் ஸ்ரீ காமராஜ நாடாரின் தலைமை நீடித்த செல்வாக்குடன் நடந்து வந்திருக்கிறது.

இதன் இரகசியம் என்ன? அதாவது ஸ்ரீ காமராஜ நாடார் இத்தகைய நீடித்த வெற்றி அடைந்ததின் காரணம் என்ன? சுயநலமில்லாமை முதற் காரணம்; சகிப்புத் தன்மை இரண்டாவது காரணம்; சகாக்களைத் தம்முடன் கட்டி இழுத்துக் கொண்டு போகும் திறமை மூன்றாவது; இடைவிடாத உழைப்பும் ஊக்கமும் நாலாவது காரணம்.

முதற் காரணமே மிக முக்கியமானது. ஸ்ரீ காமராஜ நாடார் தலைமைக் காலத்தில் தமக்கு என்பதாக ஒன்றும் அவர் தேடிக் கொள்ளவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனமே தாம், தாமே காங்கிரஸ் ஸ்தாபனம் என்ற மனோநிலையை அவர் அடைந்துவிட்டார். ஆகையால் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பெருமைக்காகவும் வெற்றிக்காகவுமே அவர் எல்லாக் காரியங்களையும் செய்தார்.

அவ்வாறு அவர் செய்த எல்லாக் காரியங்களையும் நாம் ஒப்புக்கொள்ள இயலவில்லை. சில காரியங்களில் நமது கருத்து வேற்றுமையை அவ்வப்போது வெளியிட்

டிருக்கிறோம். அதனால் என்ன! ஸர்தார் படேலும் நேருஜியும் செய்த காரியங்களில் சிலவற்றைக் குறித்தும் நாம் மாறுபட்ட கருத்தை வெளியிட்டதுண்டு. ஒவ்வொரு காரியத்துக்கும் பல அம்சங்கள் இருப்பது இயல்பு. காரியம் செய்கிறவர்கள் சில அம்சங்களைத்தான் மனதில் வைத்துக் கொள்வார்கள். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு வேறு சில அம்சங்கள் தோன்றும். அவற்றை வெளியிடுவது ஜனநாயக உரிமை. இந்த உரிமையை உபயோகப்படுத்துவது பத்திரிகைகளின் கடமை. ஆதலின் ஸ்ரீ காமராஜ நாடார் தமது கடமையைச் செய்து வந்தது போலவே நாமும் நமது கடமையைச் செய்ய நேர்ந்தது.

ஸ்ரீ காமராஜ நாடார் நிர்வாகத்தில் பல அரும் பெரும் காரியங்களும் நடந்தன; சில பெருங் குறைபாடுகளும் நேரிட்டன. குறைபாடுகளுக்குக் காரணமாயிருந்ததும் அவருடைய நல்ல குணம் ஒன்றுதான். தம்முடைய சகாக்களையும் தம்மை ஆதரித்து நின்றவர்களையும் தாம் ஆதரித்து நிற்பது அவருடைய நல்ல குணம். ஆனால் இந்த நல்ல குணத்திலிருந்து சில பொல்லாங்குகள் ஏற்பட்டன. தனிப்பட்ட வாழ்க்கையில் நண்பர்களுக்கு உதவி செய்வது வேண்டியவர்களை ஆதரித்து நிற்பதும் கைப்பற்ற வேண்டியவை. பொது வாழ்க்கையில் அதற்கு விதி விலக்குகள் உண்டு. பொது வாழ்க்கையில் ஈடுபட்டவர்களுக்குத் தயை தாட்சண்யமில்லாத கண்டிப்பான மனப்பாங்கு அவசியம். வேண்டியவர்கள், வேண்டாதவர்கள் என்ற வித்தியாசம் பார்க்கக் கூடாது. எவ்வளவு அத்தியந்த நண்பர்களாயிருந்தாலும் குற்றங் குறைகளை மழுப்பக் கூடாது; தகுதியில்லாதவர்களைப் பொறுப்புள்ள ஸ்தானங்களில் அமர்த்தக் கூடாது. சிநேகிதர்களுக்குச் சொந்த முறையில் உதவி செய்யலாம்; பொது வாழ்க்கையில் விசேஷ சலுகை ஒரு நாளும் காட்டக் கூடாது. சலுகை காட்டினால் அதிலிருந்து பொது நன்மைக்குப் பாதகமான பல விளைவுகள் உண்டாகத்தான் செய்யும்.

இந்த ஒரு குணத்தினால் அல்லது குறையினால் ஏற்பட்ட விளைவுகளைத் தவிர, மற்றப்படி ஸ்ரீ காமராஜ நாடாரின் பன்னிரண்டு வருஷத் தலைமை மிக வெற்றிகரமாகவே நடந்திருக்கிறது. தேச சேவையில் அவருடைய இடைவிடா ஊக்கத்தையும் உழைப்பையும் சுயநலங் கருதாத அரும் பெரும் தொண்டுகளையும் எவ்வளவு வேணுமானாலும் பாராட்டலாம்; எவ்வளவு பாராட்டினாலும் போதாது என்றுதான் தோன்றும்.

மாகாண காங்கிரஸ் தலைமையை விட்டுக் கொடுத்ததினால் ஸ்ரீ காமராஜ் நாடாரின் தேசத் தொண்டுக்கு முற்றுப்புள்ளி வைத்தாய் விடவில்லை. தமிழ் நாட்டின் முதன்மையான தேசிய ஊழியராக அவர் என்றும் விளங்கி வருவார். அவருடைய சேவையும் செல்வாக்கும் இம்மாகாணத்தில் மட்டுமன்றி அகில இந்திய விவகாரங்களிலும் பிரபலமடையும். தமிழ்நாடு மீண்டும் அரசியல் மேன்மை பெற்று விளங்குவதற்குரிய முயற்சிகளில் ஸ்ரீ காமராஜ நாடார் பரிபூரணமாக ஒத்துழைப்பார் என்று நம்புகிறோம்.

*　　　*　　　*

புதிதாக மாகாணக் கமிட்டியின் தலைமைப் பீடத்துக்கு வந்திருக்கும் டாக்டர் ப. சுப்பராயன் எல்லா விதத்திலும் அப்பதவிக்குத் தகுதியுடையவர். இம்மாகாணத்தில் பன்முறை மந்திரியாக இருந்து நிர்வாக அநுபவம் பெற்றவர். இந்தோனேஷியா தூதராகச் சென்று சிறந்த பணியாற்றிவிட்டு வெற்றியுடன் திரும்பி வந்தவர். அரசியலுக்காகவே பிறந்து அரசியலுக்காகவே வாழ்ந்து வருகிறவர். மிக மிக சங்கடமான சூழ்நிலையில் அவர் மாகாண காங்கிரஸ் தலைமையை ஏற்றிருக்கிறார் என்பதை நாம் மறந்து விடக்கூடாது. தமிழ் நாட்டில் காங்கிரஸ் இழந்துவிட்ட செல்வாக்கை மீண்டும் நிலைநாட்டும் மகத்தான பொறுப்பு அவர்மீது சார்ந்திருக்கிறது. இந்தப் பொறுப்பை அவர் தன்னந்தனியாக நிறைவேற்றுவது எளிதன்று. தகுந்த சகாக்களைப் பொறுக்கி எடுத்துப் புதிய காரியக் கமிட்டியை அவர் அமைத்தாக வேண்டும். மக்களுடன் தொடர்பு கொள்ளக்கூடிய ஆற்றல் வாய்ந்தவர்களின் உற்சாகமான உதவியைக் கோரிப் பெற வேண்டும். இடைவிடாத ஊக்கத்துடன் தாமும் உழைக்க வேண்டும். இவற்றையெல்லாம் அவர் நன்கு நிறைவேற்றுவார் என்று எதிர்பார்க்கிறோம். கஷ்டமான நிலைமையில் கடினமான பொறுப்பை ஒப்புக் கொண்டிருக்கும் டாக்டர் சுப்பராயன் அவர்களுக்குத் தமிழ் நாட்டிலுள்ள காங்கிரஸ் ஊழியர்கள், காங்கிரஸ் அபிமானிகள், தேச பக்தர்கள் அனைவரும் தங்களுடைய மனப் பூர்வமான ஒத்துழைப்பை அளித்து உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

# முதல் வெற்றி

சென்னைப் புதிய சட்டசபைக்குக் கனம் ஸ்ரீ ஜே. சிவஷண்முகம் பிள்ளை சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைக் குறித்து அவருக்கு வாழ்த்துக் கூறுகிறோம். அவரைத் தேர்ந்தெடுத்த ஜனப் பிரதிநிதிகளையும் வாழ்த்துகிறோம்.

பழைய சட்ட சபையில் சபாநாயகராக வீற்றிருந்த ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை அந்த உயர்ந்த பதவியை எவ்வளவு திறமையுடனும் பாரபட்சமில்லாமலும் வகித்தார் என்பதைச் சென்னை மாகாண மக்கள் நன்கு அறிவர். கட்சிச் சலுகையோ, கோஷ்டிச் சலுகையோ எதுவும் காட்டாமல் எல்லாரும் ஒத்துக் கொள்ளக் கூடிய விதத்தில் அவர் தமது கடமையைச் செலுத்தி வந்தார். எனவே, வயது வந்தவர்களின் வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்டு ஏற்பட்டுள்ள புதிய சட்டசபைக்கும் அவரே சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது மகிழ்ச்சிக்குரியது.

ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளை பழைய சட்டசபையில் சபாநாயகராக இருந்ததை முன்னிட்டு, சமீபத்தில் நடந்த பொதுத் தேர்தலில் கட்சிச் சார்பில்லாமல் சுயேச்சையாக நின்று வெற்றிபெற்றவர். எனவே எதிர்க் கட்சியினரும் அவரை ஆதரித்து ஏகமனதாகத் தேர்ந்தெடுத்திருக்கலாம். அத்தகைய பெருந்தன்மையை எதிர்க் கட்சியினர் காட்டத் தவறியது வருந்தத் தக்க விஷயம்.

அப்படி அவர்கள் பெருந்தன்மை காட்டத் தவறியபடியால், சபா நாயகர் தேர்தல், புதிய சட்டசபையில் காங்கிரஸ் கட்சிக்கு முதல் வெற்றியாக ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் கட்சியினர் ஸ்ரீ சிவஷண்முகம் பிள்ளையைச் சபாநாயகர் பத-

யிக்கு ஆதரிப்பது என்று தீர்மானித்தார்கள். மொத்தம் 206 வோட்டுக்கள் பெற்று ஸ்ரீ சிவ சண்முகம் பிள்ளை வெற்றியடைந்தார். எனவே காங்கிரஸ் அங்கத்தினர் சுமார் 156 பேரைத் தவிர மற்றும் 50 அங்கத்தினர் அவரை ஆதரிப்பதாக ஏற்படுகிறது. இதிலிருந்து புதிய சட்ட சபையில் காங்கிரஸின் பலம் எப்படியிருக்கும், காங்கிரஸை ஆதரிப்பவர்கள் எவ்வளவு பேர் இருப்பார்கள் என்றும் ஒருவாறு கணிக்கலாம். இந்த ஐம்பது அங்கத்தினரும் கட்டுப்பாடாகவும் நீடித்தும் ராஜாஜி மந்திரி சபையை ஆதரித்து வந்தால், இந்த மந்திரி சபை சென்னை மாகாணத்துக்கு அரும்பெரும் நன்மைகளைச் செய்ய இயலும்.

சென்னை மாகாண மேல் சபைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள டாக்டர் பி. வி. செரியன் அந்தப் பதவியை வகிக்க எவ்விதத்திலும் தகுதி யுடையவர் ஆவர். அவர் சென்னை மேயர் பதவியை வகித்துப் புகழ் பெற்றவர். மகாத்மாவிடம் பக்தியும் காங்கிரஸ் பற்றும் உள்ளவர். டாக்டர் செரியனும் காங்கிரஸ் கட்சியின் ஆதரவினாலேயே வெற்றி பெற்றிருக்கிறார்.

இவ்வாறு தகுதி வாய்ந்த இரு பிரமுகர்கள் இம் மாகாண ஜனப்பிரதிநிதி சபைகளின் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது குறித்துச் சென்னை மாகாண மக்களுக்கு நம் முதல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# சட்டம் படுத்தும் பாடு!

சுதந்திர இலங்கையின் பார்லிமெண்டிலும் மந்திரி சபையிலும் ஸ்தானம் பெற வேண்டிய பிரபல இலங்கை இந்தியத் தலைவர்கள் இப்போது இலங்கைப் போலீசாரின் கண்காணிப்புக்கு இலக்காகி வருகிறார்கள். இலங்கைப் பிரதமரின் மாளிகை வாசற்படியில் உண்ணாவிரதம் அனுஷ்டித்து வருகிறார்கள்; அனாதைகளாக விடப்பட்ட எட்டு லட்சம் இந்தியர்களின் ஜீவாதார உரிமையைப் பெறுவதற்காகத் தவம் கிடந்து தியாகம் செய்து வருகிறார்கள்.

"இலங்கை சர்க்கார் நிதானமாக ஆய்ந்து தோய்ந்து பார்ப்பார்களாயின் தங்கள் தவறை உணர்ந்து கொள்வார்கள். உணர்ந்து இலங்கை இந்தியர்களுக்கு வாக்குரிமை அளிப்பார்கள். அங்குள்ள இந்தியர்கள் இலங்கைப் பிரஜைகளே யன்றி, இந்தியப் பிரஜைகள் அல்ல" என்று இந்தியாவின் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி வியக்தமாகக் கூறி யுள்ளார்.

இலங்கைப் பிரதமர் டட்லி சேனநாயகாவோ, "இலங்கையில் உள்ள இந்தியர்கள் அன்னியர்கள்" என்று வாய் கூசாமல் கூறுகிறார். அவர்களுக்கு வாக்குரிமை அளித்தால், அவர்கள் இலங்கையர்களான சிங்களவர்களை நசுக்கி விடுவார்களாம்!

இந்தியர்கள் இலங்கையை ஆட்சி புரிவதற்காகச் சென்றவர்கள் அல்ல; சரீரத்தைச் சாறுகப் பிழிந்து இலங்கையைப் பண்படுத்துவதற்காகச் சென்றவர்கள். இலங்கையையே தாய் நாடாகக் கொண்டு தலைமுறை தலைமுறையாக உழைத்துப் பாடுபட்டு வாழ்ந்து வருகிறார்கள்.

இவ்வாறு இலங்கைப் பிரஜையாவதற்குள்ள சகல யோக்யதாம்சங்களும் உள்ள அவர்களை 'அன்னியர்கள்' என்று இலங்கைப் பிரதமர் குறிப்பிடுவது நியாயமா!

தவிர, பெரும்பாலும் தொழிலாளர்களான எட்டு லட்சம் இலங்கை இந்தியர்கள் அடங்கிய சமூகம், இலங்கையை ஆட்சிபுரியும் எழுபது லட்சம் சிங்களவர்கள் அடங்கிய மாபெரும் சமூகத்தை நசுக்க முயற்சிப்பதாகக் கூறுவதை உலகம் நம்ப முடியுமா!

இச்சந்தர்ப்பத்தில் இலங்கை உள்நாட்டு மந்திரி மற்றொரு விநோதமான வாதத்தைக் கிளப்பியிருக்கிறார். இலங்கை இந்தியர்களின் சத்தியாக்கிரகத்தைச் சமாளிப்பதற்காக இலங்கைப் போலீஸ் படை முழுவதையும் உபயோகிக்கும்படி நேர்ந்திருக்கிறதாம். எனவே, இந்தியர்களுக்கு விரோதமாகச் சிங்களவர்கள் பலாத்காரப் புரட்சியில் இறங்கினால், இந்தியர் சமூகத்தின் பாதுகாப்புக்குத் தாங்கள் பொறுப்பாளியாக இருக்க முடியாது என்று பயமுறுத்தி யிருக்கிறார்.

இலங்கை இந்தியர்களும் சிங்களவர்களும் ஆதி முதல் சகோதரர்கள் போலவே வாழ்ந்து வருகிறார்கள். இலங்கை இந்தியர்கள் ஆரம்பித்துள்ள சத்தியாக்கிரகப் போர் விஷயத்தில் சிங்களவர்கள் தங்கள் அனுதாபத்தைக் காட்டி வருகின்றனர். ஒரு சிங்களப் பிரமுகர் இந்திய சத்தியாக்கிரகிகளுடன் சேர்ந்து உண்ணாவிரதம் அனுஷ்டித்தது, இலங்கை இந்தியர் உரிமைப் போரை யொட்டி சிங்களவர்களின் மனநிலைக்கு உதாரணமாகும்.

இலங்கையில் தற்போது ஒரு சில இந்தியர்களே சாத்விக சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுள்ளனர். தங்களுக்கு உதவியாக இந்தியா முதலிய வெளியிடங்களிலிருந்து சத்தியாக்கிரகத் தொண்டர்கள் வரக்கூடாது என்றும் இலங்கை இந்தியர் தீர்மானம் செய்துள்ளனர். சிங்களவர்கள் கூடத் தொடர்ந்து தங்களுடன் உண்ணாவிரதம் அனுஷ்டிக்கக் கூடாது என்றும் முடிவு செய்துள்ளனர்.

புத்தர் பிரான் ஜெயந்தி விழாவை யொட்டி இரண்டு நாள் சத்தியாக்கிரகப் போரை நிறுத்தி வைப்பதென்றும் இலங்கை இந்தியத் தலைவர்கள் தீர்மானித்துள்ளனர்.

எவ்விதத்திலும் அமைதிக்குப் பங்கம் விளையக் கூடாது என்பதில் இலங்கை இந்தியத் தலைவர்கள் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறார்கள்.

அப்படி யிருக்க மேற்படி சத்தியாக்கிரகப் போரைச் சமாளிப்பதற்காக இலங்கைப் போலீஸ் படை முழுவதையும் உபயோகிக்க நேர்ந்திருப்பதாக இலங்கைப் போலீஸ் இலாகா மந்திரி கூறுவது ஆச்சரியமாக இருக்கிறது. அவர்களுக்கு விரோதமாகச் சிங்களவர்கள் பலாத்கார நடவடிக்கைகளில் ஈடுபட்டால் தாங்கள் இந்தியர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க முடியாது என்று கூறும் விசித்திரத்தை என்னவென்று சொல்லுவது!

* * *

புதிய வாக்காளர் ஜாபிதாவில் இலங்கை இந்தியர்களைச் சேர்ப்பதற்குச் சட்டம் இடம் கொடுக்கவில்லை என்பது இலங்கைப் பிரதமர் கண்டுபிடித்துள்ள சமாதானங்களில் ஒன்று.

ஆனால் இருபது வருஷங்களுக்கு மேலாக இந்தியர் அனுபவித்து வந்த வாக்குரிமை இப்போது எப்படி இல்லாமற் போகும்!

சுதந்திர இலங்கை அரசியல் திட்டத்தின்படி வயது வந்த சகலருக்கும் வாக்குரிமை உண்டு.

பழைய வாக்காளர் ஜாபிதாவில் இருந்த இரண்டரை லட்சம் இந்தியர்களின் பெயர்களை அப்புறப்படுத்தவும், அங்குள்ள இந்தியர்களுக்குச் சர்க்கார் தங்கள் இஷ்டப்படி பல தடைகள் விதிப்பதற்கும் சட்டம் இடம் கொடுத்திருக்கிறது!

இஷ்டப்படி பார்லிமெண்டைக் கலைக்கவும், புதிய வாக்காளர் ஜாபிதா பூர்த்தியாவதற்கு முன்பே தேர்தலை அவசர அவசரமாக நடத்தவும் சட்டம் இடம் கொடுத்திருக்கிறது!

ஆனால் இந்தியர்களிடமிருந்து பறிக்கப்பட்ட வாக்குரிமையை மறுபடியும் அளிப்பதற்கு மாத்திரம் சட்டம் இடம் கொடுக்கவில்லையாம்!

ஏற்கெனவே இல்லாத சட்டத் தடையைப் புதிதாக உற்பத்தி செய்து கொண்டு, அதை ஒரு காரணமாகக்காட்டுவது தர்மத்துக்கு உகந்ததல்ல.

இலங்கை மந்திரிகள் மனம் மாறுதல் அடைந்து நாகரிக உலகம் ஒப்புக் கொள்ளக்கூடிய தர்ம நியாயமான முறையைக் கடைப் பிடிப்பார்களாக.

# அரியக்குடி அற்புதம்

சங்கீத ரத்னாகர சங்கீத கலாநிதி மகாவித்வான் அரியக்குடி ஸ்ரீ ராமாநுஜ அய்யங்கார் அவர்களுக்கு இப்போது பிராயம் 62 என்பதாகச் சொல்லப்படுகிறது. இதை நிரூபிக்கச் சென்ற இரண்டு வருஷ காலமாக சஷ்டியப்த பூர்த்தியும் கொண்டாடப்பட்டு வருகிறது. ஆனாலும் அவருடைய சங்கீதத்தை,—முக்கியமாக அவரது குரலை,—கேட்பவர்களுக்கு அவருக்கு வயது 62 என்ற நிச்சயம் இலேசில் ஏற்படாது. அவர் 'என்றும் இருபத்தாறு வயது' வரம் பெற்றவரோ என்று தோன்றும். இந்த பாக்கியம் அய்யங்கார் அவர்களுக்குக் கடவுளின் அருளாலும் குரு சிசுருஷையின் மகிமையினாலுமே கிடைத்திருக்க வேண்டும்.

நமது கர்நாடக சங்கீதம் வாழையடி வாழையாகக் குரு சிஷ்ய பரம்பரையில் வளர்ந்து செழித்து வந்திருக்கிறது. அதற்கு அய்யங்கார் அவர்களே அத்தாட்சியாவார். நூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த நாதப்பிரம்ம வடிவமான ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் பல சீடர்களில் மானம்பூச்சாவடி வெங்கட சுப்பய்யர் ஒருவர். அவரிடம் பாடம் கேட்டுச் சங்கீதக்கலையை முற்றும் உணர்ந்தவர் பட்டணம் சுப்பிரமண்ய அய்யர். பட்டணம் சுப்பிரமண்ய ஐயரின் பிரபல சீடராக விளங்கியவர் ராமநாதபுரம் பூச்சி ஐயங்கார் என்று வழங்கிய ஸ்ரீ சீனிவாச அய்யங்கார் என்னும் மகா வித்துவான். அவரிடம் குருகுலவாசம் செய்து பல வருஷம் சிசுருஷை செய்து சங்கீத வித்தையாகிய அரிய சம்பத்தைப் பரிபூரணமாக அடைந்தவர் அரியக்குடி ஸ்ரீராமானுஜய்யங்கார் அவர்கள்.

குரு சிஷ்ய பரம்பரையாக வந்த நமது சங்கீதக் கலைக்கு அய்யங்கார் அவர்கள் செய்த விசேஷமான தொண்டு ஒன்று உண்டு. தற்காலத்தில் வழங்கி வரும் சங்கீத கச்சேரியின் பாணியை இந்த முறையில் வகுத்து வழி காட்டியவர் அவர்தான். அதற்கு முன்னால் பெரிய வித்வான்கள் நாலைந்து பெரிய கீர்த்தனைகளை அடுக்கடுக்கான சங்கதிகளுடன் பாடி, விஸ்தாரமாக ஸ்வரப்பிரஸ்தாரம் செய்து, ராகம் தானம் பல்லவியை மணிக்கணக்கில் பாடி, ஒரு தேவாரம் திருப்புகழ் அல்லது காவடிச் சிந்து பாடி, மங்களம் பாடிக் கச்சேரியை முடித்து விடுவார்கள்.

கர்நாடக சங்கீதக் கச்சேரிக்குத் தற்கால ரசிகர்கள் பாராட்டி அநுபவிக்கக் கூடிய முறையில் அரியக்குடி 'டெம்போ' அளித்தார். ரக்தி ராகங்

## புதிய தலைவர்




ஸ்ரீ காமராஜுக்குப் பதிலாக டாக்டர் சுப்பராயன் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

# அண்ணலின் ஆசி !




இலங்கை இந்தியர்கள் வோட்டுரிமை பெறுவதற்காக அஹிம்சை முறையில் சத்தியாக்கிரகமும் உண்ணாவிரதமும் மேற்கொண்டிருக்கிறார்கள்.

---

களிலும் அபூர்வ ராகங்களிலும் சவுக்க கால கீர்த்தனைகளையும் மத்திம கால துரித கால கீர்த்தனைகளையும் ஒன்றன்பின் ஒன்றாய் ரஸிகர்களுக்கு மூச்சுவிடக் கூட அவகாச மளிக்காமல் கானவர்ஷமாகப் பொழிந்தார். பல்லவிக்குப் பிறகு பாமர ரஞ்சகமான மெட்டுக்களில் இதர உருப்படிகளை அதிகமாகக் கையாண்டார். இதனாலெல்லாம் கர்நாடக சங்கீதத்தைப் பலரும் கேட்டு அநுபவிக்கும்படி செய்து சங்கீதத்தைப் பரவச் செய்தார். சிறிய அறைகளிலும் வீட்டுக் கூடங்களிலும் நடந்த சங்கீதக் கச்சேரிகளைப் பெரிய கொட்டகைப் பந்தல்களுக்கும் விஸ்தாரமான மண்டபங்களுக்கும் ஸ்ரீ அய்யங்கார் கொண்டு போனார்.

தமிழகத்தில் இன்றுள்ள பெரிய வித்வான்களில் அரியக்குடியைப் போல் அதிகமான கச்சேரிகளைச் செய்து, அதிகமான ஜனங்களை சங்கீத ரஸிகர்களாகச் செய்தவர் வேறு யாரும் இல்லை என்று சொல்லலாம்.

தமிழிசை வளர்ச்சிக்கும் அய்யங்கார் அரும் பெரும் தொண்டுகள் செய்திருக்கிறார். இராம நாடகக் கீர்த்தனைகளுக்கும் திவ்யப் பிரபந்த—திருப்பாவைப் பாடல்களுக்கும் பாரதி பாடல்கள் சிலவற்றுக்கும் அருமையான மெட்டுக்களைப் போட்டுப் பிரபலப் படுத்தியிருக்கிறார். அய்யங்கார் ஒரு பழைய கீர்த்தனைக்குப் புதிய மெட்டுப் போட்டு விட்டார் என்றால், அதற்கு முந்திய மெட்டுக்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து, அய்யங்கார் அமைத்த மெட்டுக்களே நிலைத்துப் பிரபல மடைகின்றன.

குரு சிஷ்ய பரம்பரையில் அய்யங்கார் வரைக்கும் வந்த அற்புத சங்கீதக் கலை அவருடன் மங்கி விடாதபடி தாமும் பல சீடர்களுக்குப் பயிற்சி தந்திருக்கிறார். அவர்களில் ஒருவர் கும்பகோணம் ஸ்ரீமதி கே. எஸ். தனம்மாள் அவர்கள். இந்தப் பெண்மணி அத்தியந்த குரு பக்தியுடன் அய்யங்கார் அவர்களிடம் சங்கீத சிட்சை பெற்றிருக்கிறார் என்பது அவருடைய பாட்டிலிருந்து தெரிகிறது. சில நாளைக்கு முன்பு கோபாலபுரம் சங்கீத சபையில் ஸ்ரீமதி தனம்மாளின் சங்கீதத்தைக் கேட்டவர்கள் அய்யங்காரின் சங்கீத முறையையும் கச்சேரி பாணியையும் அப்படியே அவர் கையாளுவதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். ஸ்ரீமதி தனம்மாள் ஆனந்த பைரவி, காம்போதி முதலிய ராகங்களை ஆலாபனம் செய்யும்போது கண்ணை மூடிக்கொண்டு கேட்டால், அய்யங்கார் அவர்களே குரலைச் சிறிது எச்சுஸ்தாயியில் சரிப்படுத்திக் கொண்டு பாடுவதுபோலிருந்தது. சவுக்க கால துரித கால கீர்த்தனங்களைப் பாடும் முறையும், சங்கதிகளை அடுக்கடுக்காகப் பொழியும் முறையும், சுருதி சுத்தமும், தானக் கட்டும், கமக வேலைப்பாடும் அப்படியே அரியக்குடி பாணியில் அமைந்திருந்தன. நாளடைவில் கச்சேரிகள் நிறைய நடந்து, சபைக் கூச்சம் தெளிந்து, அவசியமான அளவு மெருகும் ஏறும் போது ஸ்ரீமதி கே. எஸ். தனம்மாள் அவர்கள் கர்நாடக சங்கீத உலகில் மிக்க புகழ் பெற்று விளங்குவார் என்பதில் ஐயமில்லை.

• • •

மகா வித்வான் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களை நமது இந்திய சுதந்திர சர்க்கார் புது டில்லி அரசாங்க மாளிகைக்கு அழைத்துப் பாடச் செய்து சால்வையும் ரொக்கப் பரிசும் கொடுத்துச் சன்மானித்து அனுப்பியதை மிக மிகப் பாராட்டுகிறோம். நமது கர்நாடக சங்கீதக் கலைக்கு இந்திய சுதந்திர அரசாங்கம் செய்த மரியாதையாகக் கருதி மகிழ்கிறோம். "கல்கி" பத்திரிகையின் எண்ணற்ற ரஸிக நேயர்களின் சார்பாக ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களுக்கு நமது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 24

## நினைவு வந்தது

**வா**னதி மீண்டும் ஒரு முறை நினைவற்ற நிலையை அடைந்தாள். அவளுடைய கண்களும் மூடிக் கொண்டன. கொஞ்சம் கொஞ்சமாகச் சுய நினைவு வரத் தொடங்கியது. நாகலோகத்திலோ தேவலோகத்திலோ தான் இளவரசரை மணந்தது வெறும் பிரமை என்பதை உணர்ந்தாள். இளவரசரைப் பற்றிய துயரமான செய்தி கேட்டதையும் அதன் பேரில் தான் ஓடைக் கரையில் வந்து நின்றதையும் தலைசுற்றி நீரில் விழுந்ததையும் நினைவுப்படுத்திக் கொண்டாள். இந்த நினைவுகள் அவளுக்கு எல்லையற்ற ஏமாற்றத்தை அளித்தன; நெஞ்சில் சுருக்கென்று ஈட்டி பாய்வது போன்ற வலியையும் அளித்தன. கண்களைத் திறக்க முயன்றாள். ஆனால் முடியவில்லை. தன்னைத் தண்ணீரிலிருந்து தூக்கிக் கரை சேர்த்தது யாராயிருக்கும்? இளையபிராட்டியாகத் தான் இருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் படகில் வந்து கொண்டிருந்த குந்தவை தேவியாகத்தான் இருக்கவேண்டும். தன்னை எதற்காக அவர் காப்பாற்றியிருக்க வேண்டும்? ஒரேயடியாக முழுகித் தொலைந்து போய் விடும்படி விட்டிருக்கக் கூடாதா? கண்களைத் திறந்து பேசுவதற்கு முடிந்தவுடனே "ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள்?" என்று இளைய பிராட்டியுடன் சண்டை பிடிக்க வேண்டும்! தம்முடைய அருமைத் தம்பியிடம் அவருடைய அன்பு இவ்வளவுதானா?...

இதோ இளைய பிராட்டி பேசுகிறார். என்ன சொல்கிறார்? யாரிடம் சொல்கிறார்? கேட்கலாம்:—

"மயக்கத்தில் ஏதேதோ பிதற்றுகிறாள்! இந்த மட்டும் உயிர் பிழைத்ததே பெரிய காரியம்! நம்முடைய படகு மட்டும் இன்னும் சற்றுத் தூரத்தில் இருந்திருந்தால்? இவள் ஓடையில் விழுந்தது நம் கண்ணில் படாமற் போயிருந்தால்?—அதை நினைத்தாலே எனக்குக் கதி கலங்குகிறது!"

"நாம் பாராமல் விட்டிருந்தால், ஒரு விதத்தில் நல்லதாய்ப் போயிருக்கும். இந்தப் பெண்ணின் வாழ்க்கை இனிதாக முடிந்திருக்கும். தங்களால் உயிர் பிழைத்த கொடும்பாளூர் இளவரசி வாழ்க்கையில் எவ்வளவோ மனவேதனைப் பட வேண்டியிருக்கும்......"

ஆகா! இது யார், நம்மிடம் இவ்வளவு அநுதாபத்துடன் பேசுகிறது? ஆம், அந்த வாலிபர்தான்! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரசலாற்றங் கரையிலும் பார்த்த அந்த வீர வாலிபர்தான்! இளவரசர் கடலில் முழுகிய செய்தியையும் அவரே கொண்டுவந்திருக்க வேண்டும். இன்றும் இவர்கள் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள்? கேட்கலாம். கண்ணைத் திறக்க முடியாவிட்டாலும் நன்றாய்க் கேட்கிறதல்லவா!

"இது என்ன, இவ்வளவு நெஞ்சிரக்கம் இல்லாமல் பேசுகிறீர்? ஆண்பிள்ளைகளின் மனதே கல் மனதாகத்தான் இருக்குமோ?" என்றது இளைய பிராட்டியின் குரல்.

"அப்படிக் கல்நெஞ்சன் என்று தீர்ப்புக் கூறும்படியாக இப்போது நான் என்ன சொல்லி விட்டேன்?"

"இந்தப் பெண் இறந்திருந்தால் நல்லது என்று சொன்னீரே? அது போதாதா? எவ்வளவு சிரமம் எடுத்து இவளை நான் வளர்த்து வருகிறேன், தெரியுமா?......"

"இவள் பிதற்றிய வார்த்தைகளைத் தாங்கள் கேட்டீர்களா?"

"உம்முடைய செவிகளில் என்ன விழுந்தது?"

"இளவரசரை மணந்து கொள்வது பற்றி ஏதோ சொன்னதாகக் காதில் விழுந்தது......"

"ஆம், நினைவு தெரியாத மயக்கத்திலே கூட அவளுடைய வாய் அப்படி முணு முணுத்தது. இளவரசர் மீது ஆசை அவள் உள்ளத்தில் அப்படி வேரூன்றி யிருக்கிறது."

"அந்த ஆசை இந்தப் பெண்ணுக்கு நல்லதல்ல! அதனால் துன்பமும் ஏமாற்றமுந்தான் ஏற்படும்."

"ஏன் அவ்வாறு சொல்கிறீர்? இவளைக் காட்டிலும் இளவரசருக்கு ஏற்ற உயர்குலப் பெண் வேறு யார்? புராதனமான கொடும்பாளூர் வீர வம்சத்தைப் பற்றி உமக்குத் தெரியாதா?"

"நன்றாய்த் தெரியும். நான் நினைப்பது ஒன்று; தாங்கள் சொல்வது இன்னொன்று. இந்தப் பெண் எவ்வளவு உயர்குலமாயிருந்தால் என்ன? இவள் மனத்திலுள்ள சபலம் நிறைவேறப் போவதில்லை......"

"கட்டாயம் நிறைவேறியே தீரும். அது இவள் மனதில் உள்ள சபலம் அன்று. என்னுடைய மனோரதம்; நான் செய்திருக்கும் தீர்மானம்."

"தங்கள் தீர்மானமாயினும் இந்த விஷயத்தில் நிறைவேறாது."

"ஏன் மீண்டும் அவ்விதம் சொல்கிறீர்? இளவரசர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத்திரமாயிருக்கிறார் என்று சற்று முன் நீர் கூறியது உண்மைதானே?"

ஆகா! இது என்ன இன்பமான செய்தி? இளவரசர் பத்திரமாயிருக்கிறாரா? நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிறாரா? இந்தச் செய்தியைக் கேட்க இந்தச் செவிகள் கொடுத்து வைத்திருந்தனவே? ஓடை நீரில் முழுகிச் சாகாமல் நான் உயிர் பிழைத்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! இளைய பிராட்டிக்கு எத்தனையோ விதத்தில் நான் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். இதுவும் ஒன்று இப்போது சேர்ந்தது. ஆனால் ஐயோ! இது என்ன மேலே இவர் சொல்லும் செய்தி? செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருக்கிறதே!

"அம்மணி! இளவரசர் பத்திரமாயிருக்கிறார் என்பது உண்மைதான். அதனால் இவருடைய ஆசை நிறைவேறும் என்பது என்ன நிச்சயம்? இளவரசர்



இந்தப் பெண்ணை மணந்து கொள்ள மாட்டார் என்றுநான் நினைக்கிறேன்..."

"நீர் எதை வேணுமானாலும் நினைக்கலாம். இந்த உலகில் நான் இட்ட கோட்டைத் தாண்டாமல், என் பேச்சைத் தட்டாமல் நிறைவேற்றக் கூடிய ஓர் ஆண் மகன் இருக்கிறான். அவன் தான் என் தம்பி அருள்மொழி வர்மன்!"

"இளவரசி! அத்தகையவன் நானும் ஒருவன் இருக்கிறேன்......"

"பின்னர் என்ன எனக்குக் குறைவு? என்னுடைய எண்ணம் நிறைவேறுவதற்கு என்ன தடை? பழுவேட்டரையர்கள் இதற்குக் கூடக் குறுக்கே வருவார்களா, என்ன?..."

"அது எனக்குத் தெரியாது. தங்களிடம் இளவரசருக்கு எல்லையற்ற அன்பு உண்டு என்பதை நான் அறிந்திருக்கிறேன். வேறு எந்தக் காரியத்திலும் தங்கள் வார்த்தையைக் கேட்பார். அவருக்கு இராஜ்யம் ஆளுவதில் சிறிதும் இஷ்டமில்லை. என் கண் முன்னால் இலங்கை மணி மகுடத்தை வேண்டாம் என்று மறுத்தார். ஆயினும் தாங்கள் வற்புறுத்தினால் இராஜ்யம் ஆளுவதற்குக் கூடச் சம்மதிப்பார். ஆனால் இந்தப் பெண்ணை மணப்பதற்கு..."

"சம்மதிக்க மாட்டான் என்றா சொல்கிறீர்? அவ்விதம் என் அருமைத் தோழியை நிராகரிப்பதற்கு அவன் இவளிடம் என்ன குறையைக் கண்டான்? நீர்தான் என்ன கண்டீர்?"

"அம்மணி! நான் இந்தப் பெண்ணிடம் ஒரு குறையும் காணவில்லை. கண்டாலும் நம்ப மாட்டேன். இளைய பிராட்டி அரண்மனையில் பணி செய்யும் எல்லாரிலும் கீழான சேடிப் பெண்ணும் எனக்குத் தேவகன்னிகைதான். இளைய பிராட்டியின் தோட்டத்தில் வாழும் முயற்குட்டி என் கண்களுக்குத் தேவேந்திரனுடைய ஐராவதத்துக்கும் மேலானதாகத் தோன்றும். இளவரசரும் இந்தப் பெண்ணிடம் குறை ஒன்றையும் காணவில்லை. ஆனால், அவருடைய மனது வேறொரு பெண்ணிடம் சென்றிருக்கலாம் அல்லவா?..."

ஐயோ! எவ்வளவு கொடுமையான வார்த்தைகள்! இந்த வாலிபர் எதற்காக இவ்விதம் நம்முடைய புண்பட்ட உள்ளத்தில் வேலை எடுத்துக் குத்துகிறார்?

"வாணர் குலத்து வீரரே! தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. என் தம்பியைப் பற்றி ஏன் இப்பேர்ப்பட்ட அவதூறு கூறுகிறீர்!"

"அவதூறு ஒன்றுமில்லை, அம்மணி! உண்மையைத்தான் கூறுகிறேன். கண்ணால் கண்டு, காதினால் கேட்டதைச் சொல்லுகிறேன்..."

"மேலே சொல்லுக! எவ்வளவு கஷ்டமான விஷயத்தைக் கேட்கவும் இப்பொழுது நான் சித்தமாயிருக்கிறேன்."

"ஓடக்காரப் பெண் பூங்குழலி என்பவளைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இலங்கைக்கு என்னைக் கொண்டு போய்ச் சேர்த்தவளும் அவள்தான். இளவரசரையும் என்னையும் கடலிலிருந்து காப்பாற்றியவளும் அவள்தான். சூடாமணி விஹாரத்துக்கு இளவரசரைப் படகில் ஏற்றிக் கொண்டு போயிருப்பவளும் அவள்தான். சேந்தன் அமுதனிடம் மட்டும் நம்பி இளவரசரை நான் ஒப்புவித்து வந்திருக்க மாட்டேன். பூங்குழலியை நம்பித்தான் ஒப்புவித்திருக்கிறேன். அந்தப் பெண்ணுக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் இளவரசருக்கு அர்ப்பணம் செய்வாள்..."

"அதனால் என்ன? ஓடக்காரப் பெண் ஓடக்காரி தானே? உலகமாளப் பிறந்தவனை மணப்பது பற்றி அவள் கனவு காண முடியுமா? தரையில் தத்திக் குதிக்கும் சிட்டுக் குருவி வானத்தில் உயரப் பறந்து வட்டமிடும் கருடனை ஏறிட்டுப் பார்க்க முடியுமா?"

"ஏன் முடியாது? சிட்டுக்குருவியும் கருடனை அண்ணாந்து பார்க்கலாம்; கருடனும் சிட்டுக் குருவியைக் குனிந்து பார்த்து ஆசைப்படலாம்."

"என் தம்பியின் மனத்தில் அப்படி ஏதேனும் எண்ணம் உதித்திருந்தால் அதைப் போக்குவதற்கு நான் ஆயிற்று. கூடவே கூடாது. எத்தனையோ அபாயங்களிலிருந்து அருள்மொழி வர்மனை நான் தப்புவித்திருக்கிறேன். இந்த ஓடக்காரியின் மோக வலையிலிருந்தும் நான் தப்புவிப்பேன்..."

"ஓடக்காரி யென்றால் அவ்வளவு தள்ளுபடியா? குலமும் கோத்திரமும் அவ்வளவு முக்கியமா? ஓடக்காரியின் உடம்பில் ஓடுவதும் சிவப்பு இரத்தந்தானே? அவளுடைய நெஞ்சும் அரண்மனையில் பிறந்த இளவரசிகளின் நெஞ்சைப் போல் துடிப்பதில்லையா? பார்க்கப் போனால் இளவரசிகளின் அன்பில் இராஜ்ய ஆசை முதலியவை கலந்திருக்கலாம். ஆனால் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பு மாசற்றது; புனிதமானது. இளவரசரும் அவ்வாறுதான் நம்புகிறார். மற்றவர்கள் ஏன் குறுக்கே வந்து தடை

செய்ய வேண்டும்? இப்போது, வந்து, வந்து, ஊஹூம் — என் விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய நெஞ்சைப் பிளந்து அதனுள் இருப்பதைத் தங்களுக்கு நான் வெளியிட்டுக் காட்ட முடியுமானால்......"



"வேண்டாம், வேண்டாம். உம்முடைய நெஞ்சில் இருப்பது அப்படியே பத்திரமாய் இருக்கட்டும். அதுதான் நல்லது. அன்பு, ஆசை, காதல் என்பவை யெல்லாம் உலகில் பிறந்த மற்றவர்களுக்குச் சரிதான். ஆனால் இராஜ்யம் ஆளப் பிறந்தவர்களின் விஷயம் வேறு. அவர்கள் இராஜ குலத்திலேயே கலியாணம் செய்து கொள்ள வேண்டும். மனதைச் சிதற விடக்கூடாது. தவறினால் அதன் மூலம் பல தொல்லைகள் ஏற்படும். எங்கள் குடும்பத்திலேயே அதற்குத் தகுந்த உதாரணம் இருக்கிறது. என் தந்தையின் இளம் பிராயத்தில்,—இராஜ்யம் அவருக்கு வரும் என்ற உத்தேசமே இல்லாதபோது, — இப்படித்தான் காட்டில் வளர்ந்த ஒரு பெண்ணை......! ஆனால் இதையெல்லாம் இப்போது உமக்கு நான் எதற்காகச் சொல்ல வேண்டும்? இந்தப் பெண்ணுக்கும் மூர்ச்சை தெளிந்து, சுய நினைவு வந்து கொண்டிருக்கிறது. கண்ணிமைகள் அசைகின்றன. வேறு ஏதேனும் சொல்வதற்கு இல்லையா? ஈழ நாட்டில் இன்னும் பல அபாயங்களுக்கு நீங்கள் உள்ளானதாகச் சொன்னீர் அல்லவா? அதைச் சொல்லுங்கள்."

"ஆம், இளவரசி! இலங்கைச் சிம்மாசனத்தையும் மணி மகுடத்தையும் இளவரசர் மறுத்துவிட்டு வந்த அன்று இரவு நாங்கள் அநுராதபுரத்தின் வீதிகளில் வந்து கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு கட்டிடத்தின் முன்பகுதி இடிந்து விழுந்தது. ஒரு கண நேரம் நாங்கள் அங்கே தாமதித்திருந்தால் எங்கள் தலையில் விழுந்திருக்கும். உயிரோடு சமாதி ஆகியிருப்போம். அச்சமயத்தில் ஒரு பெண்மணி திடீரென்று அங்கே தோன்றினாள். சமிக்ஞை செய்து இளவரசரை அழைத்தாள்......"

"கடவுளே! அங்கேயும் ஒரு பெண்தானா உங்களைக் காப்பாற்றுவதற்கு? அந்தப் பெண் யார்?"

"அவள் யாரோ எனக்குத் தெரியாது. ஆனால் இளவரசருக்கு முன்னால் பழக்க முள்ளவளாகத் தோன்றியது......வீண் சந்தேகத்துக்கு ஆளாக வேண்டாம், அம்மணி! அந்த அம்மாள் பிராயம் முதிர்ந்தவள்......"

"எவ்வளவு பிராயம் இருக்கும்?"

"இளவரசரின் அன்னையாக இருக்கக் கூடியவள். அதோடு காது செவிடு வாயும் ஊமை!"

"என்ன? என்ன? இன்னொரு தரம் சொல்லுங்கள்!"

"பிறவிச் செவிடும் ஊமையுமான ஒரு மூதாட்டி அவள். பிராயம் நாற்பத்தைந்துக்கு மேல் இருக்கும்......"

"ஐயா! அப்படி ஒரு மூதாட்டியை ஈழநாட்டில் பார்த்தீரா? அவளைப் பற்றி மேலும் சொல்லுங்கள். அவளுடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றி ஒன்றும் தெரியாதா? அவள் எங்கே பிறந்தவள்?"

"ஈழநாட்டை அடுத்துக் கடலில் உள்ள ஒரு தீவில் பிறந்தவள்......"

இளவரசி குந்தவைதேவி அளவிலாத பரபரப்பை அடைந்து, "ஐயா! இன்னும் சொல்லுங்கள்! பார்ப்பதற்கு அவள் எப்படியிருக்கிறாள்?" என்றாள்.

"அம்மணி! அவளுடைய தோற்றத்தில் ஓர் அதிசயத்தைக் கண்டேன். அதைச் சொல்வதற்கே எனக்குத் தயக்கமாயிருக்கிறது."

"தயக்கம் வேண்டாம்! சீக்கிரம் சொல்லுங்கள்."

"சோழ நாட்டில் நான் பார்த்த ஒரு பெண்ணைப் போலவே அவள் இருந்தாள்.

வயது மட்டுந்தான் அதிகம். ஆடை ஆபரணங்கள் பூணாமல் தலைவிரி கோலமாயிருந்தாள். மற்றப்படி இங்கே நான் பார்த்த பெண்ணைப் போலவே தோன்றினாள். அதே முகம்; அதே தோற்றம்; உண்மையில் நான் ஒரு நிமிஷம் ஏமாந்து போய் விட்டேன்."

"ஐயா! அப்படிப்பட்ட பெண்,—இங்கே உள்ளவள்,—யார்?"

"இளவரசி! தங்களால் ஊகித்துத் தெரிந்து கொள்ள முடியவில்லையா?"

"நானா? இந்தப் பெண் வானதியா? தஞ்சை அரண்மனையில் உள்ள என்னுடைய அன்னையா?"

"நீங்கள் குறிப்பிட்ட யாரும் இல்லை."

"பழுவூர் இளையராணி நந்தினியா?"

"ஆம், நந்தினிதான்!"

"கடவுளே! அப்படியானால் நான் சந்தேகித்தது உண்மைதான்."

"என்ன சந்தேகித்தீர்கள்?"

"விஷ நாகத்தை விடக் கொடியவள் என்று எண்ணி நான் வெறுத்தவள் உண்மையில் என் தமக்கையாக இருக்கலாமோ என்று சந்தேகித்தேன். அது நிஜமென்று தாங்கள் சொல்வதிலிருந்து தெரிந்தது. விதியின் கொடுமையே கொடுமை. இதிலிருந்து குலம் கோத்திரம் தெரியாத ஒரு பெண்ணை அரச குலத்தைச் சேர்ந்தவர் மணப்பது எவ்வளவு பிசகு என்று தெரிகிறது."

"அம்மணி! நான் அவ்விதம் குலம் கோத்திரம் தெரியாதவன் அல்ல. எங்கள் மூதாதையர் முந்நூறு வருஷங்களாகச் செந்தமிழ் நாட்டை ஆண்டு வந்தார்கள். சேர சோழ பாண்டியர்களைச் சிறையில் அடைத்தார்கள். இன்றைக்கு எனக்கு இராஜ்யமில்லாத போதிலும் என் கையில் வாள் இருக்கிறது; என் தோளில் வலிமை இருக்கிறது; என் நெஞ்சில் தைரியம் இருக்கிறது......"

"ஐயா! தங்கள் பெருமைகளைக் கொஞ்சம் பின்னால் கேட்டுக் கொள்கிறேன். உடனே செய்வதற்குப் பல காரியங்கள் இருக்கின்றன. உம்முடைய உதவி இன்னமும் எனக்குத் தேவை. அளிப்பீர் அல்லவா?"

"எனக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் தங்களுக்காகக் கொடுக்கச் சித்தமாயிருப்பேன்."

"ஓடக்காரப் பெண் பூங்குழலிக்கு நீர் உடன் பிறந்தவர் போலிருக்கிறது. நல்லது; அந்தப் பேச்சு இப்போது வேண்டாம். இதோ, இந்தப் பெண் கண்ணைத் திறக்கப் போகிறாள்......"

ஆம்; இதற்குள் வானதிக்குப் பூரண நினைவு வந்து விட்டது. உடம்பிலும் சக்தி பிறந்துவிட்டது. மனத்தில் பலபல யோசனைகள் உதித்தன. இளவரசரிடம் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பை விடத் தன்னுடைய அன்பு அதிகமானது என்பதை நிரூபிக்கும் வரையில் தான் உயிரோடிருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அத்துடன் தஞ்சை அரண்மனையில் சக்கரவர்த்தி படுத்திருந்த அறையில் அன்றொரு நாள் இரவு தான் கண்ட காட்சியும் கேட்ட புலம்பலும் நினைவுக்கு வந்தன. அவற்றின் பொருளும் ஒருவாறு விளங்கத் தொடங்கி விட்டது.

வானதி கண் விழித்ததும் இளைய பிராட்டி "என் கண்ணே! உனக்கு இப்போது எப்படியிருக்கிறது?" என்று அன்போடு கேட்டாள்.

"எனக்கு ஒன்றுமில்லை, அக்கா! தங்களுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேனே என்பதை நினைத்தால்தான் சங்கடமாயிருக்கிறது" என்றாள்.

அச்சமயத்தில் ஆழ்வார்க்கடியான் பிரவேசித்து, "நானும் தொந்தரவு கொடுக்கத்தான் வந்திருக்கிறேன், தேவி! அரண்மனை வாசலில் ஒரே ஜனக் கூட்டமும் குழப்பமுமாயிருக்கிறது. இளவரசர் கடலில் மூழ்கிவிட்டது பற்றி ஜனங்கள் ஒரே ஆத்திரமாயிருக்கிறார்கள். தாங்கள் உடனே வந்து சமாதானம் சொல்லாவிட்டால் விபரீதம் நேரலாம்" என்றான்.

## அத்தியாயம் 25

# முதன் மந்திரி வந்தார்

பழையாறை நகரின் வீதிகள் அன்று வரை என்றும் கண்டிராதபடி அல்லோல கல்லோலமாயிருந்தன. அத்தொன்னகரில் இராஜ மாளிகைகள் இருந்த பகுதியை நோக்கி ஜனங்கள் திரள் திரளாகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் வயோதிகர்களும் வாலிபர்களும் சிறுவர்களும் கூட்டம் கூட்டமாகச் சென்றார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் புத்தர்களும் சமணர்களும் அக் கூட்டத்தில் கலந்திருந்தார்கள். கடும் விரதங்கள்

இம் மாத வெளியீடு



அசோகா பிக்சர்ஸ்

# என் தங்கை

டைரக்ஷன்: CH. நாராயணமூர்த்தி • M.K.R. நம்பியார்

கதை, வசனம்: வில்லன்: T.S. நடராஜன் ஸ்டுடியோ: நியூடோன்

அசோகா பிக்சர்ஸ், 18, லஸ், அவன்யூ, மதராஸ், 4

BHARAT STUDIO

கொண்ட காலாமுகர்கள் சிலரும் அக் கூட்டத்தில் ஆங்காங்கு காணப்பட்டார்கள். மக்களில் அநேகர் அழுது புலம்பிக் கொண்டு சென்றார்கள். பலர் பழுவேட்டரையர்களை வாயாரச் சபித்துக் கொண்டு சென்றார்கள்.

வாலிபர்கள் சிலர் ஆங்காங்கே கையில் கழிகளுடன் காணப்பட்டார்கள். அவர்கள் அவ்வப்போது ஒருவருடைய கழியை இன்னொருவர் தட்டி ஓசைப் படுத்திக் கொண்டு சென்றார்கள். கழி அடிபடும் ஓசை கேட்டதும் "பழுவேட்டரையர்களின் தலையில் அப்படிப் போடு!" என்று சிலர் மெதுவாகச் சொன்னார்கள். சிலர் அவ்வாறு சத்தம் போட்டும் கத்தினார்கள். சத்தம் போட்டுக் கத்தியவர்களில் காலாமுகர்கள் முக்கியமா யிருந்தவர்கள்.

பழையாறையி லிருந்த முக்கியமான இராஜ மாளிகைகளின் முன் முகப்புக்கள் பிறைச் சந்திரன் வடிவமாக அமைந்திருந்தன. எல்லா மாளிகைகளுக்கும் சேர்ந்து முன் பக்கத்தில் விசாலமான நிலா முற்றம் இருந்தது. விசேஷமான சந்தர்ப்பங்களில் பதினாயிரக் கணக்கான மக்கள் கூடி நிற்கும்படியாக அந்த நிலா முற்றம் விசாலமாயிருந்தது. முற்றத்தைச் சூழ்ந்து வெளிப் புறத்தில் உயரமான மதிள் சுவர் இருந்தது. அந்த மதிள் சுவருக்கு மூன்று வாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் சில அரண்மனைச் சேவகர்கள் காவல் புரிந்தார்கள்.

திரள் திரளாக வந்து கொண்டிருந்த கூட்டம் நிலா முற்றத்தின் மூன்று வாசல்களின் அருகிலும் வந்து சேரத் தொடங்கியது. விநாடிக்கு விநாடி கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. செய்தி கொண்டு வந்திருந்த இருவரையும் அவர்களை அழைத்து வந்த ஊர்ச் சேவகர்களையும் மட்டும் அரண்மனைக் காவலர்கள் உள்ளே விட்டார்கள். மற்றவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆனால் வெகு நேரம் தடுத்து நிறுத்தி வைக்க முடியவில்லை. கூட்டத்தில் எங்கிருந்து கிளம்பு கின்றன என்று தெரியாதபடி சில குரல்கள் 'உள்ளே போங்கள்! உள்ளே போங்கள்!' என்று கூவின. பின்னாலிருந்தவர்கள் முன்னாலிருந்தவர்களைத் தள்ளினார்கள். கடலின் அலைகள் ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு வந்து கடைசிப் பேரலையைக் கரையிலே போய் மோதும்படி செய்கின்றனவல்லவா? அது போலவே இந்த ஜன சமுத்திரத்திலும் நடந்தது.

முன்னாலிருந்தவர்கள் பின்னால் வந்தவர்களால் மோதப்பட்டு வாசற் காவல் புரிந்த சேவகர்களைத் தள்ளிக்கொண்டு உள்ளே புகுந்தார்கள். அவ்வளவுதான்; காவேரிக் கரையில் சிறிய உடைப்பு எடுத்தாலும் வரவரப் பெரிதாகி வெள்ளம் குபுகுபுவென்று பாய்வது போல் ஜனங்கள் நிலா முற்றத்தில் தடதடவென்று பிரவேசித்தனர். சிறிது நேரத்துக்குள் நிலா முற்றம் நிறைந்து விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கே சேர்ந்து விட்டார்கள்.

இப்படி ஜனங்கள் கட்டுக் காவல்களை மீறி நிலா முற்றத்தில் புகுந்து கொண்டிருந்தபோது ஏற்பட்ட ஆரவாரத்தைத் தான் செம்பியன் மாதேவி மதுராந்தகனோடு பேசிக் கொண்டிருக்கையில் கேட்டார். குமாரனுடன் வாதாடுவதை அத்துடன் நிறுத்திவிட்டு அரண்மனை மேல் மாடத்தில் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தெய்வீகக் களை பொருந்திய அப்பெரு மூதாட்டியின் திருமுகத்தையும், கூப்பிய கைகளுடன் அவர் நின்ற சாந்தமான தோற்றத்தையும் பார்த்ததும் அந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரம் அடங்கியது. சில விநாடி நேரம் அங்கே நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

"தாயே! எங்கள் இளவரசர் எங்கே? பொன்னியின் செல்வர் எங்கே? தங்கள் கண்ணுக்குக் கண்ணான அருள்மொழி வர்மர் எங்கே?" என்று அக் கூட்டத்தில் சில குரல்கள் எழுந்தன. அவ்வளவுதான்; அந்த ஜன சமுத்திரத்தில் முன்னை விடப் பன்மடங்கு ஆரவாரம் கிளம்பி விட்டது.

செம்பியன் மாதேவி ஒன்றும் புரியாதவராகத் திகைத்து நின்றார். பழையாறை மக்களின் இதயங்களைக் கொள்ளை கொண்டிருந்த பொன்னியின் செல்வனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டது என்பதை மட்டும் அறிந்தாள். அது என்ன ஆபத்து? எப்படி நேர்ந்தது? பழுவேட்டரையர்களே ஏதேனும் விபரீதமான காரியம் செய்து சோழகுலத்துக்கும் மதுராந்தகனுக்கும் அழியாத பழியை உண்டாக்கி விட்டார்களோ?

இச்சமயத்தில் தஞ்சாவூர்த் தூதர்கள் இடித்துப் பிடித்து ஜனங்களைத் தள்ளிக் கொண்டு முன்னால் வந்து சேர்ந்தார்கள். அவர்களை அழைத்துக் கொண்டுவந்த சேவகர்களில் ஒருவன், "பெருமாட்டி! இவர்கள் தஞ்சாவூரிலிருந்து முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்!" என்றான். செம்பியன்மாதேவி ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கை அமர்த்திவிட்டுத் தூதர்களை நோக்கி

"என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்!" என்று கேட்டார்.

"தாயே! மிகத் துயரமான செய்தி கொண்டு வந்திருக்கும் அபாக்கியசாலிகள் நாங்கள். சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரில் இளவரசர் அருள்மொழிவர்மர் இலங்கையிலிருந்து கோடிக்கரைக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்தார். வரும் வழியில் சுழிக் காற்றில் கப்பல் அகப்பட்டுக் கொண்டு விட்டது. துணையாக வந்த கப்பல் உடைந்து முழுகி விட்டது. அதிலிருந்தவர்களைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். பிறகு அகப்படவில்லை. கடலிலும் கடற்கரையெங்கும் தேடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. சக்கரவர்த்தியும் மலையமான் மகளாரும் இச்செய்தியைக் கேட்டுப் பெருந் துயரில் ஆழ்ந்திருக்கிறார்கள். தங்களையும் மதுராந்தகத் தேவரையும் இளைய பிராட்டியையும் உடனே புறப்பட்டுத் தஞ்சைக்கு வரும்படி சக்கரவர்த்தி எங்கள் மூலம் செய்தி அனுப்பியிருக்கிறார்!"

இவ்வாறு தூதர்கள் கூறியது செம்பியன்மாதேவியின் காதிலும் விழுந்தது. அதே சமயத்தில் ஜனக் கூட்டத்தின் செவிகளிலும் விழுந்தது.

செம்பியன்மா தேவியின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. அதைப் பார்த்த ஜனங்கள் மேலும் 'ஓ' என்று கதறினார்கள்.

கூட்டத்தில் முன்புறம் இருந்தவர்களில் ஒருவர் "தாயே! தாங்கள் தஞ்சை போகக் கூடாது! இளைய பிராட்டியும் தஞ்சைக்குப் போகக் கூடாது. சக்கரவர்த்தியை இங்கே வரும்படி செய்ய வேண்டும்" என்று கூவினார்.

"பொன்னியின் செல்வர் கடலில் முழுகி விட்டார் என்பது பொய். பழுவேட்டரையர்கள்தான் அவரைக் கொன்றிருப்பார்கள்!" என்றார் இன்னொருவர்.

"மதுராந்தகரும் இனித் தஞ்சைக்குப் போகக்கூடாது. இங்கேயே இருக்கவேண்டும்!" என்று இன்னொரு குரல் கேட்டது.

"இளைய பிராட்டி எங்கே? அவரை நாங்கள் பார்க்கவேண்டும்!" என்று பல குரல்கள் கூவின.

செம்பியன்மாதேவி தன் அருகிலிருந்த சேடிகளில் ஒருத்தியைப் பார்த்து இளவரசியை அழைத்து வரச் சொன்னார்.

இதே கூட்டத்தில் கலந்து நின்று கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானும் அதே சமயத்தில் அங்கிருந்து நகர்ந்து சென்றான். பழையபடி குறுக்கு வழியில் விரைவாகச் சென்று குந்தவை தேவி வானதியை மூர்ச்சை தெளிவித்துக் கொண்டிருந்த கொடி வீட்டைக் கண்டு பிடித்தான். வந்தியத்தேவனிடம் இளைய பிராட்டி கூறிய கடைசி வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே சென்று அரண்மனை முற்றத்தில் நடக்கும் அமர்க்களத்தைப் பற்றி அறிவித்தான்.

இளைய பிராட்டி வானதிக்குச் சைத்யோபசாரம் செய்யும் வேலையைப் பணிப்பெண்களிடம் ஒப்புவித்து விட்டு, அவசரமாகக் கிளம்பினாள்.

* * *

இளைய பிராட்டி குந்தவை தேவி அரண்மனை மேல்மாட முகப்பில் செம்பியன் மாதேவியின் அருகில் நெருங்கிய போது அந்த மூதாட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதைக் கவனித்தாள். அந்தக் காட்சி குந்தவையின் கண்களிலும் கண்ணீர் பெருகச் செய்தது. இதைக் கண்ட ஜனசமூகம் மேலும் துயரசாகரத்தில் மூழ்கியது.

"பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கவில்லை. பழுவேட்டரையர்கள் கொன்று விட்டார்கள். அவர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும்!"

"சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்கள்.

அவரை விடுவித்து அழைத்து வர வேண்டும். இளவரசி கட்டளையிட்டால் இந்தக் கணமே நாங்கள் புறப்படச் சித்தமாயிருக்கிறோம்.''

இவ்வாறெல்லாம் அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் இளைய பிராட்டியைப் பார்த்துக் கூவினார்கள்.

குந்தவையின் மனம் தீவிரமாகச் சிந்தித்தது. இளவரசர் உயிரோடிருக்கிறார் என்ற உண்மையை இப்போது வெளியிடக் கூடாது. ஆனால் ஜனங்களையும் சமாதானப்படுத்தி அனுப்ப வேண்டும். அதற்கு ஒரு வழி தோன்றியது.

கண்ணில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஜனக் கூட்டத்தின் முன் வரிசையில் நின்றவர்களை இளவரசி நோக்கினாள். அதற்குள் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அங்கே வந்து நின்று கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியானைப் பார்த்து இளைய பிராட்டி மேலே வரும்படி சமிக்ஞை செய்தாள். ஆழ்வார்க்கடியான் அவ்விதமே மேலே ஏறிச் சென்றான். அவனிடம் குந்தவை மெல்லிய குரலில் ஏதோ கூறினாள்.

ஆழ்வார்க்கடியான் ஜனங்களைப் பார்த்துக் கையமர்த்தினான். இடி முழக்கம் போன்ற பெரிய குரலில் கூறினான்: "பொன்னியின் செல்வர் இறந்திருப்பார் என்று இளையபிராட்டியினால் நம்ப முடியவில்லை. முன்னொரு சமயம் காவேரித் தாய் இளவரசரை ஏந்திக் காப்பாற்றியது போல் சமுத்திர ராஜனும் அவரைக் காப்பாற்றியிருப்பார் என்று நம்புகிறார். நிமித்தக்காரனைக் கேட்டதில் அவனும் அப்படியே சொல்கிறானாம். இளவரசரைத் தேடிக் கண்டுபிடிக்க இளையபிராட்டி தக்க ஏற்பாடு செய்வார். உங்களையெல்லாம் நிம்மதியாக வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக் கொள்கிறார்!''

இதைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டத்தில் ஒரு பெரிய ஆசுவாச நெடு மூச்சைப் போன்ற சத்தம் எழுந்தது.

"நிமித்தக்காரன் எங்கே? அவன் வாயினால் நாங்களும் அந்த நல்ல செய்தியைக் கேட்கிறோம்'' என்றார் ஒருவர்.

இதுதான் சமயம் என்று வந்தியத்தேவன் தாவிக் குதித்து மேல்மாடத்துக்குச் சென்றான்.

ஆழ்வார்க்கடியான் அருகில் போய் நின்று கொண்டு, "இளவரசருக்குப் பெரிய கண்டம் நேர்ந்தது உண்மைதான். ஆனால் அவருடைய உயிருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லை. விரைவில் கிடைத்து விடுவார்!'' என்றான்.

"உனக்கு எப்படித் தெரியும்?'' என்றது ஒரு குரல்.

"நான் நிமித்தக்காரன். கிரகங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். நிமித்தங்களைப் பார்த்தும் தெரிந்து கொண்டேன்.''

"பொய்! நீ சொல்வது பொய்! நீ நிமித்தக்காரன் அல்ல! நீ ஒற்றன்!'' என்றது அதே குரல்.

வந்தியத்தேவன் அந்தக் குரலுக்கு உரியவனைக் கவனித்துப் பார்த்தான். அவன் வைத்தியர் மகன் என்பதை அறிந்து கொண்டான்.

"பைத்தியக்காரா! என்னையா ஒற்றன் என்று சொல்லுகிறாய்? நான் ஒற்றனாயிருந்தால், யாருடைய ஒற்றன்?'' என்று கேட்டான்.

"பழுவேட்டரையர்களுடைய ஒற்றன்!'' என்று வைத்தியர் மகன் பளிச்சென்று மறுமொழி கூறினான்.

"என்ன சொன்னாய்?'' என்று வந்தியத்தேவன் கர்ஜித்தான்.

ஜனங்கள் கீழே நின்ற நிலா முற்றத்திலிருந்து வந்தியத்தேவன் நின்ற மேல்மாடம் பன்னிரண்டு அடி உயரத்தில் இருந்தது. அதை அவன் பொருட்படுத்தாமல் மேல்மாடத்திலிருந்து வைத்தியர் மகன் பேரில் பாய்ந்தான்.

இருவருக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. சண்டை என்றால் எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் வேடிக்கை பார்ப்பதில் பிரியம் உண்டு அல்லவா?

வந்தியத்தேவனுக்கும் வைத்தியர் மகனுக்கும் சண்டை நடந்த இடத்தைச் சுற்றி இடைவெளி விட்டு ஜனங்கள் வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்கள்.

மேல் மாடத்தில் இருந்தவர்கள் கவலையுடன் அதை நோக்கினார்கள்.

ஜனக் கூட்டத்தில் பெரும்பாலோர் விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமலே முன்னைவிட அதிகக் கூச்சல் போடத் தொடங்கினார்கள்.

இச்சமயத்தில் வாசற்பக்கத்திலிருந்து சங்கநாதமும் கொம்புகளின் முழக்கமும் கேட்டன.

"முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வருகிறார். வழிவிடுங்கள்!'' என்ற குரல் முழக்கமும் கேட்டது.

அந்தப் பெருங்கூட்டத்தில் முதன் மந்திரிக்குத் தானாகவே வழி ஏற்பட்டது.




டைரக்ஷன்: பிரசாத்... ஸ்டூடியோ: சென்ட்ரல் & நெப்ட்யூன்




"**ப**த்மா!"

"ஏ, பத்மா! உன் காது செவிடா? கூப்பிடுகிறது காதில் விழவில்லை?"

"விழுகிறது. ஏன் அம்மா இப்படிக் கத்துகிறாய்? விஷயம் என்ன?"

"விஷயம் என்னவா? ஏண்டி அங்கேயே உட்கார்ந்துகொண்டு என்ன விசேஷம் என்று கேட்கிறாயே! கூப்பிடக் கூப்பிட ஒரு பெண்ணு இப்படியா புத்தகத்தைப் படித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும்? ஏ, பத்மா! பரீட்சைக்குப் போகிறாயா, கதைப் புத்தகத்தைப் படித்துவிட்டு?"

"கதை முடிகிறதற்கு இன்னும் நான்கு பக்கம் தான் இருக்கிறது, அம்மா! முடித்து விட்டு இதோ வந்து விடுகிறேன்" என்றாள் பத்மா.

"இந்தப் பசங்களோடு கத்திக் கத்தி என் தொண்டை தான் பறி போகிறது. ரகுவுக்கோ ஆபீஸ் போவதற்கு நேரமாகி விட்டது. சமையலோ இன்னும் ஆகவில்லை. நான் ஒருத்தியாக எந்த வேலையைத் தான் செய்கிறது! எல்லாத்தையும் போட்டுவிட்டு 'அக்கடா' என்று ஒரு மூலையில் உட்கார்ந்து விட்டால் தேவலை போல் தோன்றுகிறது.

"ரகுவோ அரட்டை அடிக்கிறதெல்லாம் அடித்துவிட்டு ஆபீஸ் போகிற சமயத்தில் வந்து இறக்கை கட்டிக் கொண்டுதான் பறப்பான். சமையல் ஆகாவிட்டாலோ பட்டினியோடு போகிறேனென்று கிளம்பி விடுகிறான். நமக்கு 'அக்ஞானம்' கேட்கிறதா, உடனே அவனைச் சமாதானப் படுத்தி, ஆனவரைக்கும் போட்டு அனுப்ப வேண்டியிருக்கிறது.

"பெண்ணைப் பற்றியோ கேட்கவே வேண்டாம். 'ஏதடா அம்மா ஒண்டிக்காரிதானே, நாமும்தான் ஒரு காரியத்தைச் செய்வோம்' என்றிருக்கணுமே. ஊஹூம்.

"காலின் கீழே இருப்பதைக் கூட இடறிக் கொண்டே போவானே தவிர, அதைச் சற்று ஒரு ஓரமாக நகர்த்தித்தான் வைப்போமே என்கிற எண்ணமே அவனுக்குத் தோன்றாது.

"நான் முழுவதும் அவன் படிக்கிற புஸ்தகங்களுக்குக் கணக்கே கிடையாது. போதாததற்கு அவன் அப்பா வேறு நாவல் புஸ்தகமும் பத்திரிகைகளும் கொண்டு வந்து போட்டு விடுகிறார். கேட்டோமானால் 'நீ தான் படிக்காத மூடம், நம்ம குழந்தை யாவது படித்தவளாயிருக்கட்டுமே' என்கிறார். நான் படிக்காத மூடமாம். ஆம்! உண்மைதான்; அப்பா என்னைப் படிக்க வைக்கவில்லை தான். ஆனால் நான் வாயால் சொல்லும் கணக்கை, இந்தக் காலத்துப் பசங்கள் நோட்டில் போட்டுக் காட்டுகிறதுகள். இதுதான் படிக்கும் லட்சணம் போலிருக்கிறது. இந்த மாதிரி பத்திரிகைகளை யெல்லாம் வரவழைத்துப் பணத்தை விரயமாக்காதீர்கள் என்று எவ்வளவு தரம் சொன்னேன்? கேட்டால்தானே? இந்தமாதிரி படித்துக் கொண்டிருந்தால் வீட்டுக் காரியத்தை யார் கவனிக்கிறது? எல்லா வேலையும் நானே செய்யணுமென்றால் என் உடம்பிலே வலுவு ஏது?" என்று முணுமுணுத்துக் கொண்டே பாகீரதி அடுக்களையில் புகுந்தாள்.

எப்படி அவள் வாய் இடைவிடாமல் முணுமுணுத்துக் கொண்டு வந்ததோ அதேவிதம் அவள் கைகள் 'பரபர' வென்று வேலை செய்து கொண்டிருந்தன.

இவை எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு தம் அறையில் உட்கார்ந்திருந்த ஆத்மநாதய்யர் அன்றைய பேப்பரைப் பார்த்துக் கொண்டே எழுந்து சமையல் அறையை நோக்கிப் போனார். பிறகு தணிந்த குரலில் கூறினார்: "என்ன விஷயம் பாகீரதி? ஏன் இப்படிக் கோபித்துக் கொள்கிறாய்? வேண்டுமானால் நான் ஒத்தாசை செய்கிறேன்."

"போதுமே! காப்பி குடித்த டம்ளரை இங்கிருந்து அங்கே எடுத்து வைப்பதற்கே என்னை ஆயிரம் தடவை கூப்பிட்டாகிறது. இன்றைக்கு எனக்கு ஒத்தாசை செய்ய வந்து விட்டீர்கள். நான் உங்களை அடுக்களை வேலைக்கா கூப்பிட்டேன்? இந்தப் பசங்கள் இரண்டும் தலைகால் புரியாமல் குதிக்கிறதுகளே, எல்லாம் யாராலே? நீங்கள் அந்தப் பெண்ணுக்கு அதிகச் செல்லம் கொடுத்துப் பாழாக்குகிறீர்கள். ஏதாவது நாம் சொல்லப் போனோமானால் என்பேரில் சீறி விழுகிறீர்கள். எல்லாம் என்தலை எழுத்து!" என்று தன்னை நொந்து கொண்டு தன் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள் பாகீரதி.

பாகீரதியின் கோபம் குழந்தைகளின் பேரிலிருந்து திடீரென்று தன்மேல் வந்து வர்ஷிக்க ஆரம்பித்ததும், "ஏன் பாகீரதி! நான் என்ன குற்றம் செய்தேன், சொல்லு?

அப்படி இருந்தால் உன்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்'' என்றார் ஆத்மநாதய்யர். அவர் குரலில் பரிகாசம் தொனித்தது. பாகீரதியின் கோபமும் கொஞ்சம் தணிந்தது.

அவள் சொன்னாள்.

''போதும் நிறுத்துங்கோ. உங்க மன்னிப்பும் நீங்களும்! அவளுக்கு இப்படிக் கண்ட கண்ட புத்தகங்களை எல்லாம் வாங்கிக் கொடுக்கிறீர்களே! வீட்டுக் காரியங்களை எல்லாம் என்றைக்குத் தெரிந்து கொள்கிறது? நாளைக்குஒருவரிடம் போய்க் 'குப்பை' கொட்ட வேண்டாமா? அவளுக்குத்தான் தெரிய வேண்டாமா? அதையும் தவிர நான் ஒருத்தியாக வீட்டுக் காரியத்தைச் செய்ய வேண்டி யிருக்கிறது. நான் என்ன, இரும்பினால் செய்யப்பட்ட மெஷினா ஓயாது வேலை செய்து கொண்டே இருக்க? பெண் தான் இப்படி என்றால் பிள்ளையாண்டானைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். நீங்கள் தகப்பனாரா இருந்து அவர்களைக் கண்டித்து வராவிட்டால் அவர்கள் எப்பொழுதுதான் திருந்துவார்கள்? நான் ஏதாவது சொல்லலாமென்றாலோ என் சொல்லை யார் லட்சியம் செய்கிறார்கள்? நான் எங்கம்மா வயிற்றிலே பிறந்து இந்த வீட்டிற்குச் சமையல்காரியாக வந்து விட்டேன். அவனுக்குப் பேச விஷயம் ஏதாவது கிடைத்து விட்டாலோ குளிக்கணும், சாப்பிடணும், ஆபீஸுக்குப்போயாக வேண்டும் என்பதெல்லாம் மறந்து விடுகிறது. ஆபீஸ் போவதற்கு நேரமாகி விட்டாலோ சமையல் உள்ளே வந்து இல்லாத 'ஹாட்டி' எல்லாம் அடிக்கிறான். எல்லாவற்றிற்கும் நான்தானே இப்போது பிணைப்பட்டிருக்கிறேன்? என் தலை சாய்ந்தால் எல்லாம் தெரியும்'' என்றாள் விரக்தியுடன்.



''என்ன பாகீரதி! விஷயம் தெரியாமல் பேசுகிறாயே! அவர்களுக்கெல்லாம் நீதானே தாயார்? குழந்தைகளுக்குத் தாயார் செய்யாமல் பின் வேறு யார் செய்வார்கள்? பத்மாவும் நம்ம வீட்டில் எத்தனை நாளைக்கு இருப்பாள்? கலியாணம் ஆகும் வரைதானே? ஆனபிறகு இங்கேயே உட்கார்ந்திருக்கவா போகிறாள்? அங்கே இவ்விதம் உட்கார்ந்து கொண்டு புத்தகம் படிக்கத்தான் முடியுமா? ஏதோ நம்மிடம் இருக்கும் வரையில் சற்று மகிழ்ச்சியுடன் இருக்கட்டுமே என்றுதான் பத்திரிகைகளும், நாவல் புத்தகங்களும் அவள் படிக்க வாங்கிப் போடுகிறேன். அவளும் படித்துக் கொண்டுதான் இருக்கிறாள். வீணாகப் பொழுதைக் கழிக்கிறதில்லையே? ரகுவும் என்ன சின்னப் பிள்ளையா? அவனும் ஏதோ வேலையில் இருக்கிறான். ஆபீஸ் நண்பர்கள் வருவார்கள். கொஞ்சம் குஷியாகப் பேசிப் பொழுதைக் கழிக்கின்றனர். இதில் தவறு என்ன இருக்கிறது? நம்ம காலம் இன்னும் எவ்வளவு நாள்வரையில்? இருக்கும் வரை குழந்தைகள் சந்தோஷத்தைக் கண்டு நாமும் தான் சந்தோஷப்படுவோமே!'' என்று குழந்தைகள் பக்கமாகப் பேசினார் ஆத்மநாதய்யர்.

''ஆமாம். இப்படி எல்லாம் பேசித்தான் அவர்களுக்கு இடம் கொடுத்து விட்டீர்கள். அவர்களிரண்டு பேரும் என் தலைமேல் ஏறி உட்கார்ந்து விட்டார்கள். என்றால் இனிமேல் ஒரு தூசியை எடுத்து அப்புறம் போட முடியாது. அவசியம் அவனுக்கு ஒரு கால்கட்டைக் கட்டிவிட வேண்டியதுதான். இப்படியே உழைத்துக் கொண்டிருந்தால் ஒரு நாளில்லா விட்டால் ஒரு நாள் என் உடம்பும் படுக்கையில் சாய்ந்துவிடும். ஆமாம், சொல்லிவிட்டேன்!'' இதைச் சொல்லும்போதே பாகீரதியின் தொண்டை அடைத்துக் கொண்டது. கண்களில் நீர் பெருகிற்று.

இதைக் கண்டு ஆத்மநாதய்யரின் மனமும் சங்கடப்பட்டது. ''அடி, பைத்தியமே! நான் இதுவரை சொன்னது உன்காதில் ஏறவில்லை பார்த்தாயா? பிள்ளையாண்டான் காலிப் பயலா? அப்படி எல்லாமில்லை. எந்த எந்தக் காலத்தில் எப்படி எப்படி இருக்கவேண்டுமோ அப்படித்தான் நம்ம ரகுராமனும் இருக்கிறான். இந்தத் தெருவிலிருக்கும் மற்றப் பையன்களைப் பாரேன். அந்தப் பையன்களை விட நம்ம ரகு எவ்வளவோ நல்லவன். மற்றப் பையன்களிடையே நம்ம ரகுவையும் நிறுத்திப் பார்த்தோமானால் நம்ம பையனை நாம் பூஜை செய்ய வேண்டுமாக்கும்.''

''நன்றாகப் பேசி விட்டீர்கள்! நீங்கள் போய்ச் சுகமாகப் பேப்பர் பார்த்துக் கொண்டிருங்கள். நான் பைத்தியமாக இருந்து விட்டுப் போகிறேன். வாஸ்தவம்; இந்த விஷயங்களை உங்களிடம் சொல்லவந்தேனே. உங்கள் விஷயம்தான் அலாதியாயிற்றே. நீங்கள் பரம வேதாந்தி. எல்லோருமே அப்படி இருக்க முடியுமா? நாலு 'ரிடையர்ட்' வேதாந்திகள் வந்து விட்டால் உங்களுக்கு இந்த வீட்டு நினைவுதான் வருமா? எல்லோரும் சேர்ந்து வேதாந்தத்தில் மூழ்கி விடுவீர்கள். எல்லாம் நான் வேணது பட்டு விட்டேன். இனிமேலும் படவேண்டுமா என்பதுதான் என்னுடைய ஆதங்கம்!''

''உனக்கு என்ன சொன்னாலும் தெரியாது. அவனுக்கும் ஒருத்தி வந்துவிட்டால் உனக்கு அப்புறம் என்ன கஷ்டம்? அப்

பொழுது கால்மேல் கால் போட்டுக்கொண்டு நீ உன் நாட்டுப் பெண்ணை அதிகாரம் பண்ணேன். யார் உன்னைக் கேட்கப் போகிறார்கள்? இதற்கெல்லாம் தான் கொஞ்சம் கல்வி அறிவு வேண்டுமென்கிறது" என்று பாகீரதிக்கு இதமாக எடுத்துச் சொன்னார்.

இந்தச் சம்பாஷணைக்குப் பிறகு ஒரு வாரம் அமைதியுடன் கழிந்தது.

ரகுராமன் ஒருநாள் திடீரென்று ஜுரம் வந்து படுத்து விட்டான். வைத்தியர்கள் "டைபாய்ட்" என்று கூறினர். இதைக் கண்ட ஆத்மநாதய்யர் அவன் கட்டிலின் அருகில் வந்து இரைந்தார்: "சொன்னால் கேட்டால்தானே? வேளா வேளைக்குக் குளி, வேளா வேளைக்குச் சாப்பிடு என்று எவ்வளவோ தடவை அம்மா சொன்னாளே, நீ கேட்டாயா? வெளியே சுற்றாதே என்று அப்பொழுதே சொன்னேனே கேட்டாயா? இப்பொழுது அவஸ்தைப் படுகிறது யாரு, நீதானே? அப்பொழுது உனது நண்பர்கள் எல்லோரும் வந்து அரட்டை அடித்தார்களே. இப்போ யாராவது ஒருத்தன் வந்து பார்த்தானா? ஏதாவது உதவிதான் செய்தார்களா? இல்லையாது. அதற்குத்தான் எதுவும் ஒரு 'லிமிட்'டோட இருக்கவேண்டும் என்பது. அவ்விதமில்லா விட்டால் துன்பம் தான். மருந்து வாங்கவோ, டாக்டரைக் கூப்பிடவோ நான்தானே அலையவேண்டியிருக்கிறது. தனக்காகவாவது தெரிந்திருக்க வேண்டும்; இல்லை. சொன்னலாவது கேட்க வேண்டும். இரண்டும் இல்லையென்றால் உனக்கும் கஷ்டம் இருக்கிறவர்களுக்கும் கஷ்டம்" என்று படபடத்தார் ஆத்மநாதய்யர்.

கணவனது இரைச்சலைக் கேட்டதும் பாகீரதி ரகுவின் கட்டிலின் அருகில் வந்து நின்று கொண்டாள். அவர் முகத்தின் மாறுதலைத் தெரிந்து கொண்ட பாகீரதி, "அவனை என்ன சொல்கிறீர்கள்? அவன் சுத்துகிறான் என்றால் பின் எப்பொழுதுதான் சுத்துகிறது? அந்தக் காலத்தில் செய்யாத பின் எந்தக் காலத்தில் தான் செய்ய முடியும்? நாள் முழுவதும் ஆபீஸில் மாடுமாதிரி உழைக்கவேண்டியிருக்கிறது. அதற்காகவாவது இப்படிக் கொஞ்சம் உல்லாசமாகச் சுத்தத்தான் வேண்டும். இவன் 'பூஞ்சை' உடம்பிற்கு அது ஒத்துக் கொள்ள வில்லை என்றால் அதற்காக ரகு என்ன செய்வான்? ஒரு நாலு நாள் உடம்பு இப்படித்தான் இருக்கும். அதன் பிறகு எல்லாம் சரியாகப் போய் விடும். இது என்ன பெரிய விஷயம்? விடுங்கோ! அவனை ஒன்றும் சொல்லாதேங்கோ" என்று ஜோல்லி விட்டுப் பார்லி கஞ்சியை ஆற்றி ரகுவின் கையில் கொடுத்தாள் பாகீரதி.

தாய் உள்ளத்தின் அபரிமிதமான வாத்சல்யத்தையும் அதன் மாறுபட்டத்தையும் பற்றி ஆராய்ந்து கொண்டே கையில் அன்றைய பேப்பருடன் தாழ்வாரத்தில் போட்டிருந்த சாய்வு நாற்காலியில் போய் உட்கார்ந்தார் ஆத்மநாதய்யர்.

...ரதி, "அவனை என்ன



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 322. புகழ் உளதனையும் உள்ளாய்!

ராவணன் முதலில் மூர்ச்சித்து அப்படியும் இப்படியுமாக விழுகிறான்.

உணர்ச்சி வந்ததும் 'உனக்கு முன்னால் போய் விடுகிறேன் அமர உலகத்துக்கு' என்று புலம்புகிறான். பிரலாபிக்கிற காரியமும் நின்று விடுகிறது. துயரம் ராவணனுடைய உடலையே பாடாய்ப் படுத்துகிறது.

படுத்திருந்தவன் எழுகிறான். அப்படியே உட்கார்ந்திருக்கிறான்.

நெடு நேரம் உட்கார்ந்திருக்கிறான். பேச்சில்லை. பிறகு நடக்கிறான். அடுத்தாற் போல் இந்திரஜித்தை எண்ணி இரக்கம் வருகிறது.

எழும்இ ருக்கும்
  நடக்கும், இரக்கம்உற்(று)
அழும், அ ரற்றும்,
  அயர்க்கும் வியர்க்கும், போய்
விழும், வி ழிக்கும்
  முகிழ்க்கும், தன் மேனியால்
உழும்நி லத்தை,
  உருளும் புரளுமால்.

[எழும் இருக்கும் நடக்கும்: எழுகிறதற்குக் கொஞ்சம் நேரமாகிறது. கொஞ்சம் நேரம் உட்கார்ந்திருக்கிறான், பிறகு அங்குமிங்குமாய் நடக்கிறான்; அரற்றும்: அடடா! அடடா! என்று கதறுகிறான்; அயர்க்கும்: எல்லாவற்றையும் மறந்தவனும் மயங்குகிறான்; வியர்க்கும்: ஒரே வியர்வையாய்க் கொட்டுகிறது தேகம்; போய் விழும்: எங்கேயோ பார்த்து நடந்து சென்று தடம் புரண்டு விழுகிறான்; விழிக்கும் முகிழ்க்கும்: கண்ணை விரித்துப் பார்க்கிறான்; அப்படியே மூடிய வண்ணமாய் இருக்கிறான்; மேனியால் உழும் நிலத்தை: தன்னுடைய பருத்த முதுகையும் தோள்களையும் கொண்டு தரையைத் தேய்க்கிறான் — ஏதோ நிலத்தை உழுகிறது போலத் தோன்றுகிறது. உருளும் புரளுமால்: வெகு தூரம் பட பட வென்று உருண்டு போகிறான்; கடைசியில் களைத்துப் போய் இடது புறமும் வலது புறமுமாகப் புரளுகிறான்.]

* * *

இப்படியெல்லாம் அறிவிழந்தவனாய் வதைகிறான் ராவணன். இந்த நிலையில் மண்டோதரி அங்கு வந்தாள். நடுநடுங்கிக் கீழே விழுகிறான். தரையில் தலையை முட்டிக் கொள்ளுகிறான்.

ராவணனுக்குக் கொஞ்சம் உணர்ச்சி வந்து விழித்துப் பார்த்தான், மண்டோதரியின் துயரத்தைப் பார்த்ததும் அடங்காத கோபமே வந்து விட்டது. "இவ்வளவுக்கும் அந்தச் சீதைதானே காரணம்!" என்று கத்தினான். அப்படியே வாளை எடுத்தான். "இதோ அவளைக் கொன்று விட்டு மறு காரியம்" என்று ஓடுகிறான்.

பார்த்தான் மகோதரன். பின்னாக ஓடியே போய் வழி மறித்து, ராவணனிடம் வாதாடுகிறான்.

* * *

பஞ்ச பூதங்களைப் பற்றிப் பேசுகிறான்:

"இந்த இலங்கையைச் சுற்றிச் சமுத்திரம் இருக்கிறது. அது வற்றுகிறது என்றுண்டோ? மேக மண்டலங்கள் வான வட்டத்திலிருந்து உண்டாய்க் குவிந்து குவிந்து என்றென்றும் இருக்கத்தானே செய்யும். இந்தப் பரந்த பூமியும் என்றென்றும் இருக்கத்தானே செய்யும். வெற்றிடம் இல்லையென்று சொல்லக் கூடிய ஆகாயமான வஸ்துவும் என்

றென்றும் இருக்கததானே செய்யும். இதோ காற்று வீசி அடிக்கிறதே அதுவும் என்றென்றும் ஓடிக்கொண்டு தானே இருக்கும்.''

நீருள தனையும், சூழ்ந் த
நெருப்புள தனையும், நீண் ட
பாருள தனையும், வா னின்
பரப்புள தனையும், கா லின்
பேருள தனையும், பே ராப்
பெரும்பழி பிடித்திபோ லாம்,
போருள தனையும்வென் று
புகழுள தனையும்உள் ளாய்!

[நீருள தனையும்: சமுத்திரம் உள்ள வரையும் (நீர்—சமுத்திரம்): சூழ்ந்த நெருப்புள தனையும்: மேக மண்டலங்கள் உள்ள அளவும் (நெருப்பு—மகத்துக்கு அடையாளப் பெயர்): நீண்ட பாருள தனையும்: விஸ்தாரமான பூமி உள்ள அளவும்; வானின் பரப்புள தனையும்: ஆகாய மாகிய வஸ்து உள்ள அளவும்; காலின் பேருள தனையும்: காற்றின் அசைதல் உள்ள அளவும்; பேராப் பெரும்பழி பிடித்தி போலாம்: நீங்காத பெரும் பழியைப் பிடித்துக் கொள்ளுவதற்குப் போன மாதிரி ஓடுகிறாயே!

நீ என்றால் சாமான்யப்பட்ட பேர்வழியா?—போருள தனையும் வென்று புகழுள தனையும் உள்ளாய் அல்லவா நீ.]

அற்புதமான பாவம் கொண்டது செய்யுள். கம்பருடைய முத்திரை தெளிவாய்க் கிடக்கிறது. பாடலைப் பார்த்து அதிசயித்துக் கொண்டே இருக்க வேண்டியது தான்.

# படித்துப் பாருங்கள்!

## அமராவதிக் கரையில்

எந்த ஒரு சம்பவமும் உணர்ச்சி நிறைந்ததாயிருப்பின் அது ஒரு நல்ல கதைக்கு அடிப்படையாகிவிடும் என்பதற்கு உதாரணமாக இருக்கிறது, ''அமராவதிக் கரையில்'' என்னும் சிறு கதை.

அவளுக்குப் பிரசவ சமயம். வேதனையினால் துடித்தாள். இரவு வேளை. குடிசைக்குள் விளக்கு இல்லை. அவள் புருஷன் சாம்பன் பெரிய பணக்காரரான பிள்ளைவாள் கடைக்குப் போய் மண்ணெண்ணெய் கேட்டான். இல்லை என்று கூறி விரட்டி விட்டார் அவர். சாம்பன் மனம் ஒடிந்து வீடு திரும்பினான். அவன் தாயார் ஏற்றி வைத்த அகல் விளக்கு, அலை காற்று காரணமாக அணைந்து விட்டது. மண்ணெண்ணெய்க் கடைப் பிள்ளைவாள், அவ்வூர்க் கோயிலுக்குப் புதிதாகப் போட்டிருந்த மின்சார விளக்குகள் அப்பொழுது பளீரென்று எரிந்தன. கலெக்டர் துரை வந்து ஏற்றினார். எப்படியிருக்கிறது! இந்த மாறுபட்ட சூழ்நிலையை விளக்கும் முறையில் ''கோயில் விளக்கு'' என்னும் சிறு கதை அமைந்திருக்கிறது.

இதே மாதிரி, ''பெண் பாவம்'', ''பெரிய மீன்'', ''கங்கா ஸ்நானம்'' முதலிய கதைகளும், சின்ன விஷயங்களைக் கொண்டே உள்ளத்தை நெருடும் கதைகளாகத் திகழ்கின்றன.

எழுதியவர்: ''அகிலன்''; பிரசுரம்: புதுமைப் பிரசுரம்; பெண்ணாடம், தென்னாற்காடு ஜில்லா; விலை: ரூ. 1—0—0.

## சுடர்

பல இனிய கதைகள், கட்டுரைகள், கவிதைகள் வர்ணப் படங்களுடன் தில்லித் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப் பட்டிருக்கும் இந்தப் புஸ்தகம் வெகு ருசிகரமாக இருக்கிறது. ஜனாதிபதி ராஜேன் பாபு இதற்கு ஒரு வாழ்த்து ஹிந்தியில் அனுப்பியிருக்கிறார். ராஜாஜி ஒரு சின்னஞ் சிறு கட்டுரை வழங்கியிருக்கிறார். டாக்டர் எஸ் ஆர். ரங்கநாதன், ஸ்ரீ தொ. மு. பாஸ்கரத் தொண்டமான், கந்தா முதலியவர்கள் விஷயதானம் செய்திருக்கிறார்கள்.

கிடைக்குமிடம்: தில்லித் தமிழ்ச் சங்கம், தில்லி. விலை: அணா 12.

## நூற்றாண்டு விழா மலர்

ஆரம்பத்தில் மிகச் சிறிய பாடசாலையாயிருந்து படிப்படியாக வளர்ந்து இன்று தமிழ் நாட்டின் தலை சிறந்த உயர்நிலைப் பள்ளிகளில் ஒன்றாக விளங்குவது சென்னைத் திருவல்லிக்கேணியிலிருக்கும் ஹிந்து ஹைஸ்கூல். மகா கனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் அந்த உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராயிருந்து பள்ளிக்கூடம் உயர்வதற்கு அரும் பாடுபட்டார். அத்தகைய பழம் பெருமை வாய்ந்த பள்ளிக்கூடம் தொடங்கி இவ்வாண்டோடு நூறாண்டு பூர்த்தியாயிற்று. அந்த வைபவத்தை முன்னிட்டு இந்த மலர் வெளியிடப்பட்டிருக்கிறது. பிரபலமான பழைய மாணவர்களின் நினைவு அலைகளும், விழாவைப்பாராட்டிப் பிரமுகர்கள் அளித்துள்ள வாழ்த்துச் செய்திகளும் நூற்றாண்டு மலரில் இடம் பெற்றுள்ளன.

## வைர விழா மலர்

சென்னை, புரசபாக்கத்தில் இருக்கும் ஸ்ரீமான்-ஸ்ரீமதி முத்தைய செட்டியார் உயர்நிலைப் பள்ளிக் கூடங்களின் அறுபதாண்டு நிறைவு விழா மலர் வெளிவந்திருக்கிறது. இந்தப் பள்ளிக்கூடங்களைப் பற்றிய வரலாறும், ஆதரவாளர்களின் உருவப் படங்களும், ருசிகரமான மாணவ மாணவிகளின் கட்டுரைகளும் அடங்கி யிருக்கின்றன.

## நாடக விழா மலர்

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில், நாடகக் கலைஞர்களான ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் நாடகங்கள் சமீபத்தில் நடைபெற்றன. அந்த நாடக விழாவின் நினைவு மலராக இந்நூல் வெளிவந்திருக்கிறது. கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை, யோகி சுத்தானந்த பாரதி, ரா. பி. சேதுப் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை, ஹாஸ்யமேதை கே. சாரங்கபாணி, டி. கே. ஷண்முகம் முதலியவர்களின் கட்டுரைகள் இம்மலரில் இடம் பெற்று மணம் வீசுகின்றன.

கிடைக்குமிடம்: பம்பாய்த் தமிழ்ச் சங்கம் மாதுங்கா, பம்பாய்.

# கடவுளின் பதில்!

பூஜையறையிலுள்ள ஸ்வாமி படத்தின் முன்னால் கண்களை மூடியவண்ணம் உட்கார்ந்திருந்தாள் சிறுமி சீதா. அவள் வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது. அப்போது "சீதா! விளையாட வருகிறாயா? போகலாம்" என்று கத்தினான் அவள் அண்ணா ரகு. சீதாவின் மனம் பலத்த சிந்தனையில் ஆழ்ந்திருந்ததால் ரகு கூப்பிட்டது அவள் காதில் விழவில்லை. ரகு பூஜையறைக்குள் வந்து அவள் தோளைப் பிடித்து உலுக்கி, "சீதா! தோட்டத்துக்குப் போய் விளையாடலாமா என்று நாலு தரமாகக் கூப்பிடுகிறேனே, காதில் விழவில்லையா?" என்று கேட்டான்.

"நான் வரவில்லை, அண்ணா!" என்று பதிலளித்தாள் சீதா.

"ஏன்? உன்னை அம்மா அடித்தாளா? அதற்காகத் தான் கோபித்துக் கொண்டு இங்கே வந்து உட்கார்ந்து விட்டாயா?" என்று வினவினான் ரகு.

"அம்மா என்னை அடிக்கவில்லை. நானே என்னுடைய பிறந்த நாளுக்குப் பட்டுப் பாவாடை வாங்கித் தா என்று அம்மாவைக் கேட்டேன். அப்பாவால் இப்பொழுது நிறையப் பணம் போட்டு வாங்க முடியாது என்று சொல்லி விட்டாள்..."

"ஆமாம்! அதற்கு இங்கே உட்கார்ந்து என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ரகு.

"'கடவுள் தான் கண் திறக்கணும்' என்று அம்மா சொன்னாள். ஆகையால் கடவுளை வேண்டிக் கொண்டாலாவது பட்டுப் பாவாடை கிடைக்குமா என்று..."

"அப்படியானால் நீ விளையாட வர மாட்டாயாக்கும்" என்றான் ரகு அவள் பேச்சை இடைமறித்து.

"நான் வரவில்லை" என்ற சீதாவின் திடமான பதில் ரகுவைப் பூஜையறையிலிருந்து பின் வாங்கச் செய்தது.

மறு நாள் காலை. சீதா பொழுது விடிவதற்குள் எழுந்திருந்து குளித்து விட்டுத் தன்னிடமிருந்த வெளுத்த ஆடைகளை உடுத்திக் கொண்டு நின்றாள். ரகு அந்தச் சமயம் அவளருகில் வந்து, "என்ன சீதா? நேற்று கடவுளிடம் ரொம்ப வேண்டிக் கொண்டாயே? கடவுள் உன் முன் வந்து காட்சியளித்தாரா? ஏதாவது பேசினாரா? பட்டுப் பாவாடை கொண்டு வந்து கொடுத்தாரா?" என்று கேலியாகக் கேட்டான் ரகு.

"ஓ! கடவுள் என்னிடம் வந்து பேசினாரே...?" என்றாள் சீதா.

"நிசமாகவா? என்ன பேசினார்?" என்று ஆவலுடன் கேட்டான் ரகு.

"'பட்டுப் பாவாடை உனக்கு இல்லை' என்று சொல்லி விட்டார்" என்று சமாத்காரமாகக் கூறினாள் சீதா. —பி. எஸ். மணி




# பாதி விலை

சமீபத்தில் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து ஏராளமான கடிகார சரக்குகளை வரவழைத்து அவைகளை பாதி விலைக்கு குறைவாக வழங்குகிறோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம். ஒவ்வொரு கடிகாரமும் 3 வருஷ உத்திரவாதம் கொண்டவை. ஒவ்வொரு கடிகாரத்துடனும், ஒரு காரண்டி சர்டிபிகேட்டும், ஒரு நேர்த்தியான ஸ்ட்ராப், ஒரு வெல்வெட் பெட்டியும் இனாமாகக் கொடுக்கப்படும். பாக்கிங், தபால் செலவு இலவசம்.

## இலவசம்

புது வருஷ காலண்டரும், மடக்கக் கூடிய சீப்பும் இணைக்கப்பட்ட தையல் இல்லாத அமெரிக்கன் பிளாஸ்டிக் மணிபர்ஸ் ஒன்றும் ஒவ்வொரு கடிகாரத்துடனும் இலவசமாக அனுப்பப்படும்

குறைந்த விலைகளின் விவரம் கீழ்க்காணுமாறு:



வாட்டர் ப்ரூப், ரேடியம் சைஸ் 10½

நெ. ரூ.
1 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 49/-
2 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 51/-



சிறிய ரவுண்டு சைஸ் 9¾

நெ. ரூ.
3 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 39/-
4 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 41/-



செண்டர் செகண்ட் சைஸ் 9¾

5 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 39/-
6 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 41/-



வளைவு சைஸ் 7¾

7 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 39/-
8 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 41/-



டன்னோ சைஸ் 6¾

9 க்ரோம் ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 39/-
10 ரோ.கோ. ஸ்டீல்பேக் 15 ஜூவல்ஸ் 41/-



லேடீஸ் சைஸ் 5½

11 ரோ.கோ. ஸ்டீல்பேக், ஸில்க் ஸ்ட்ராப், பேன்ஸி டயல் 15 ஜூவல்ஸ் 50/-

**PEARL WATCH CO., P. B. No. 6514, BOMBAY - 26**




ஒரு காட்டில் மூன்று முயல்கள் இருந்தன. மூன்று முயல்களுக்கும் காட்டில் வீடு கட்டிக் கொண்டு சௌகரியமாக வசிக்க வேண்டும் என்று ரொம்ப நாட்களாக ஆசை.

ஒரு நாள் அந்தக் காட்டை அடுத்திருந்த ரஸ்தாவில் ஒரு வைக்கோல் வண்டி போயிற்று. அந்த வண்டியைப் பார்த்ததும் பெரிய முயல், சின்ன முயலைப் பார்த்து, "அதோ ஒரு வைக்கோல் வண்டி போகிறது பார்த்தாயா? அந்த வண்டிக்காரனைக் கேட்டுக் கொஞ்சம் வைக்கோல் வாங்கி வந்தால் நாம் மூவரும் ஆளுக்கு ஒரு அழகான வீடு கட்டிக் கொள்ளலாம். வா, போகலாம்!" என்றது. சின்ன முயல் "சரி, பேஷான யோசனை!" என்று கூறிப் புறப்பட்டது.

ஆனால் கடைசி முயல்குட்டி மாத்திரம் அதற்குச் சம்மதிக்கவில்லை.

"வைக்கோல் வீடு வசிப்பதற்கு மிகவும் சௌகரியமாயிருக்கும். ஆனால் நாம் அந்த வீட்டில் வசித்தால் நம்மைப் பிடித்துத் தின்ன வேண்டும் என்று காத்துக் கொண்டிருக்கும் கொடிய வன விலங்குகளிடமிருந்து தப்ப முடியாது. கல் கட்டடமாயிருந்தால் நாம் பயமின்றி வாழலாம்!" என்று கூறியது குட்டி முயல்.

இதைக் கேட்டதும் பெரிய முயல்கள் இரண்டும் 'ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா' என்று சிரித்தன.

"கல் கட்டடம் நமக்குக் கட்டித் தருவதற்கு யார் காத்துக் கொண்டிருக்கிறார்கள்! நீ வேண்டுமானால் கல்ல வீடாகக் கட்டிக் கொள். எங்களுக்கு வேண்டாம்!" என்று சொல்லி விட்டு, இரண்டு முயல்களும் ரஸ்தாவை நோக்கிப் பாய்ந்து ஓடி வைக்கோல் வண்டிக்காரனுக்கு எதிரே போய் நின்று வண்டியை நிறுத்தின. அவனிடம் கெஞ்சிக் கூத்தாடிக் கொஞ்சம் வைக்கோல் வாங்கி வந்து ஓர் இடம் தேடிப் பிடித்து, அங்கே இரண்டு முயல்களும் தனித்தனியே இரண்டு வீடுகள் கட்டின. சுள்ளிகளும் வைக்கோலுமாகச் சேர்ந்து வீடுகள் ஜோராக அமைந்து விட்டன. குட்டி முயல் மட்டும் முன்பு இருந்த இடத்திலேயே இருந்தது.

சில நாட்கள் சந்தோஷமாகச் சென்றன. பெரிய முயல்கள் இரண்டும் வைக்கோல் வீடுகளில் சுகமாக வாழ்ந்து வந்தன. ஆனால் இந்தச் சுகம் நீடித்து நிற்கவில்லை. ஒரு நாள் ஒரு பெரிய ஓநாய் அந்தப் பக்கம் வந்தது. முயல்களின் சுக வாழ்வைப் பார்த்தது. அவ்வளவுதான். எப்படியும் அவைகளைக் கொண்டு போய் விட வேண்டுமென்று நிர்மானித்தது. உடனே நேரே முயல்களின் வீட்டுக்கு அருகே போயிற்று.

அந்தப் பயங்கர ஓநாயைக் கண்டதும் முயல்கள் இரண்டும் தங்கள் வீட்டுக் குள்ளே ஓடிப் பதுங்கிக் கொண்டன.

"முயல்களே, மரியாதையாக வெளியே வந்து விடுங்கள். இல்லாவிட்டால் உங்கள் வீட்டைப் 'பூ' என்று ஊதித் தள்ளி விட்டு உங்களைக் கொண்டுபோய் விடுவேன்!" என்று ஓநாய் மிகப் பயங்கரமான குரலில் கூறி உறுமியது. முயல்கள் மூச்சுக்கூடப் பலமாக விடவில்லை; வெளியே வரவும் இல்லை. உடனே ஓநாய்க்குப் பிரமாதமான கோபம் வந்து விட்டது. தன் பெரிய வாயினால் 'பூ, பூ' என்று ஊதி முயல்களின் வைக்கோல் வீடுகளைத் தரை மட்டமாக்கி விட்டு, அவைகளைத் தூக்கிக் கொண்டு தன் இருப்பிடத்துக்குப் போய்ச் சேர்ந்தது.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு குட்டி முயலுக்குத் தன் வீட்டைப் பற்றிய கவலை அதிகமாகி விட்டது. ஓநாயினால் ஒன்றும் செய்ய முடியாத அளவுக்குப் பலமான ஒரு கல் வீடு கட்டிவிட வேண்டும் என்று நிர்மானித்து, சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தது.

குட்டி முயல் காத்திருந்தது வீண் போகவில்லை. ஒருநாள் காட்டுப் பாதை வழியாக ஒரு செங்கல் வண்டி போயிற்று. குட்டி முயல் ஓடிச் சென்று, "வண்டிக்காரா, எனக்கு வீடுகட்டிக் கொள்ள நாலைந்து செங்கற்கள் வேண்டும்" என்று கேட்டது.

வண்டிக்காரனுக்கு இதைப் பார்த்ததும் ஆச்சரியமாய்ப் போய் விட்டது. முயல் குட்டியின் புத்திசாலித்தனத்தைப் பார்த்து அவனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவன் குட்டி முயலுக்குச் செங்கல் மாத்திரம் தரவில்லை. செங்கல், சிமிட்டி முதலியவற்றை யெல்லாம் கொண்டு வந்து தானே இரண்டு மூன்று அறைகளுடன் ஒரு அழகான வீடு கட்டிக் கொடுத்து விட்டான். குட்டி முய

வின் சந்தோஷத்துக்குக் கேட்க வேண்டுமா? ஆனந்தமாக வீட்டில் குடி புகுந்தது.

குட்டி முயலின் ஆனந்த வாழ்வுக்கும் ஆபத்து வந்து விட்டது. இல்லா விட்டால் அதன் வீடு அந்த ஓநாயின் கண்களில் படுமா?

ஓநாய்க்கு ஆச்சரியம் தாங்கவில்லை. 'காட்டில் எப்படி இவ்வளவு அழகான வீட்டைக் கட்ட முடிந்தது?' என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டது ஓநாய். சற்று நேரத்துக்கெல்லாம் அந்த வீட்டுக்குள்ளிருந்து ஒரு அழகிய குட்டி முயல் வருவதைப் பார்த்ததும் ஓநாயின் அதிசயம் இன்னும் அதிகமாகி விட்டது. ஓநாயைக் கண்டதும் குட்டி முயல் உள்ளே ஓடி விட்டது.

"முயலே, மரியாதையாக வெளியே வந்து விடு. இல்லா விட்டால் 'பூ' வென்று ஊதி விடுவேன் உன் வீட்டை!" என்று பயங்கரமாக உறுமியது ஓநாய். தனக்குப் பதிலே கிடைக்காமற் போகவே ஓநாயின் கோபம் அளவு மீறி விட்டது. குட்டி முயலின் சின்ன வீட்டை நெருங்கிப் 'பூ, பூ' என்று ஊதியது. அந்த வீடு மிகவும் பலமாகக் கட்டப் பட்டிருந்த படியினால் ஓநாய் எத்தனை தடவை ஊதியும் அது கொஞ்சங் கூட அசையவில்லை. ஓநாய்க்குக் களைப்பாய்ப்போய் விட்டது. அது சிறிது நேரம் யோசித்தது.

அடுத்த நிமிஷம் மிகவும் அன்பு கனியும் குரலில், ஓநாய், "முயலே, சும்மா விளையாட்டுக்காக உன்னைப் பயமுறுத்தினேன். பயப் படாதே. ஒரு நல்ல சமாசாரம் சொல்லுவதற்காகத்தான் உன்னைக் கூப்பிட்டேன். இங்கிருந்து நாலு மைல் தூரத்தில் இருக்கும் மேலைக்காட்டில் கிறையக் கம்பு பயிரிட்டிருக்கிறான் ஒருவன். நல்ல செழிப்பாயிருக்கிறது பயிர்! அங்கே போனால் ஒரு கை பார்க்கலாம்! நாளைக் காலை ஐந்து மணிக்கு இங்கிருந்து புறப்பட்டு விடவேண்டும். நீ தயாராய் இரு. நான் வந்து உன்னை அழைத்துக் கொண்டு போகிறேன்!" என்று சொல்லி விட்டுப் போயிற்று.

மறு நாள் பொழுது விடிவதற்கு முன்னால் எழுந்திருந்து குட்டி முயல் காற்றை விட வேகமாய்ப் பறந்து மேலைக் காட்டுக்குப் போய்க் கம்பங் கொல்லையில் புகுந்து வேண்டிய மட்டும் தின்று விட்டு இருள் பிரிவதற்கு முன்னால் வீட்டுக்குத் திரும்பி விட்டது.

ஓநாய் இரைக்க இரைக்க ஓடி முயல் வீட்டுக்கு வந்து கூப்பிட்டது.

"ஓநாயே, உனக்கு என் நன்றி. ரொம்பப் பிரமாதமா யிருந்தது கம்பு! போய்த் தின்று விட்டு வந்து விட்டேன்!" என்று முயல் சந்தோஷத்துடன் கூறியது.

ஓநாய்க்குப் பிரமாதமாகக் கோபம் வந்தது. கோபத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு இன்னொரு சூழ்ச்சி செய்யத் தீர்மானித்தது.

"முயலே, சின்னமலை அடிவாரத்தில் ஒரு பெரிய மாந்தோப்பு இருக்கிறது. அங்கே உயர்ந்த ரகத்தைச் சேர்ந்த குட்டை மாமரங்கள் இருக்கின்றன. அவற்றில் பழுத்துத் தொங்கும் பழங்கள் கீழ தரையில் படியும். சுலபமாய்த் தின்னலாம். காலையில் ஐந்து மணிக்குப் புறப்படலாம். நீ மட்டும் தனியாய்ப் போய் விடாதே. நான் ரொம்ப சீக்கிரம் வந்து விடுவேன்!" என்று சொல்லி விட்டு ஓடி விட்டது ஓநாய்.

மறு நாள் பொழுது விடியுமுன் எழுந்திருந்து முயல் சின்னமலை அடிவாரத்துக்குப் போய்ச் சேர்ந்தது. அங்கே 'கம்' மென்று மாம்பழ வாசனை வீசியது. முயல் அந்த வாசனையை ரஸித்துக் கொண்டே குட்டை மரத்தில் ஏறிச் சௌக்கியமாக உட்கார்ந்து கொண்டு, பழங்களைத் தின்ன ஆரம்பித்தது.

"முயலே எனக்காகக் காத்துக் கொண்டிராமல் தானே ஓடிவந்து விட்டாய்? உன்னை என்ன செய்கிறேன் பார்!" என்று கத்திக் கொண்டே ஓநாய் அங்கு வந்து சேர்ந்தது.

உடனே முயல் சட்டென்று கையிலிருந்த பெரிய மாம்பழத்தை எடுத்து ஓநாயைப் பார்த்து அடித்தது. 'பொத்'தென்று மாம்பழம் ஓநாயின் முகத்தில் போய் விழுந்தது.

ஓநாயின் உறுமலும் பழம் விழுந்த ஓசையும் கேட்கவே தோட்டக்காரர்கள் பத்துப் பேர் கைத்தடியுடன் ஓடி வந்து ஓநாயை வளைத்துக் கொண்டனர். முகத்தில் மாம்பழம் வந்து விழுந்ததால் ஓநாய்க்குக் கண்ணே திறக்க முடியவில்லை; அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விட்டது. இந்தச் சமயத்தில் முயல் ஒருவருக்கும் தெரியாமல் நழுவி விட்டது.

நேரே முயல் குட்டி ஓநாய் இருந்த காட்டுக்கு ஓடியது. அங்கே பெரிய முயல், சின்ன முயல் இரண்டும் சிறை வைக்கப்பட் டிருந்தன. அவைகளிடம் ஓநாய் தோட்டக்காரர்களிடம் அகப்பட்டுக்கொண்ட கதையைச் சொல்லியது. அவைகளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அந்த உற்சாகத்தில் சிறையிலிருந்து ஒரு நொடியில் தப்பி வெளியே வந்துவிட்டன. பிறகு மூன்று முயல்களும் சந்தோஷமாகக் கல் வீட்டில் வசித்தன.






கோணல்

அழுகைப் பற்றி இப்பொழுது உலகத்திற்கே ஒரு பெரிய கவலை ஏற்பட்டிருக்கிறது. அழுகை இல்லாத இடத்திலெல்லாம் தேடிக் கண்டு பிடித்துப் பரிசு கொடுக்கக் கூடிய காலமல்லவா இது? அழகைப் பற்றி உலகத்திற்கே இவ்வளவு கவலை ஏற்பட்டிருக்கும் போது அந்தக் கவலை என்னை மாத்திரம் பாதிக்காமல் விட்டுவிடுமா? அழகை உலகத்தில் எங்கெங்கெல்லாமோ காண்கிறார்கள். மற்றவைகளில் காண்பவர்கள் அஞ்ஞானிகள். பெண்களிடம் யார் அழகைக் காண்கிறார்களோ அவர்கள்தான் மெய்ஞானிகள் என்பது என்னுடைய திடமான அபிப்பிராயம். போகட்டும். இந்த அழகென்பது எங்கே இருந்து வந்தது? இது தானே முதலில் ஆராய்ச்சி செய்யப்பட வேண்டிய முக்கிய அம்சம்? அழகென்னும் சொல்லே அழுகை என்னும் சொல்லின் ஜன்யமாக இருக்க வேண்டும் என்பது என் முடிவு. இதைக் கண்டு பிடிக்க அதிகம் சிரமப்பட வேண்டாம். அழுகை—அழகு, அழகு—அழுகை என்று நான்கு தடவை திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்த்தால் போதும். இரண்டு வார்த்தைகளுக்கும் உள்ள ஒற்றுமையும் அழகும் விளங்கிவிடும். உண்மையிலேயே அழுகையில் ஒரு அழகு இருக்கத்தானிருக்கிறது. யசோதையிடம் மத்தால் அடிபட்டுக் கண்ணன் அழுத அழுகையின் அழகைத் தான் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று தேவகி மனம் வருந்தினளாம்! இந்தப் பூர்விக ஆதாரத்திலிருந்து விளங்கவில்லையா அழுகையில் தான் அழகு இருக்கிறது என்ற விஷயம்?

அழகைத் தேடிப் பரிசு கொடுக்க நினைக்கும் ரஸிக அன்பர்கள் முதலில் அழுகையைத் தேட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அழுகையில் அழகைக் காண்பது தான் மெய் ஞான மார்க்கம். மற்றவைகளெல்லாம் பொய் ஞான வழி. உதாரணமாக அழகுப் போட்டியில் ஈடுபட விரும்பும் பெண்களை யெல்லாம் ஒரு பொது இடத்தில் கூட்டிச் சேர்த்தாற்போல் அழச் சொல்ல வேண்டும். அவர்கள் விசித்து விசித்து அழலாம். கண் கலங்காமல், கண்ணீர் வடிக்காமல் அழலாம். எப்படி வேண்டுமானாலும் அழலாம். முக்கியமாக இந்த அழுகைகளில் எந்த அழுகையில் சிறந்த அழகு பரிமளிக்கிறதோ அவர்களுக்கு முதற்பரிசு கொடுத்து 'மிஸ் உலகம்' என்ற பட்டப் பெயரையும் சூட்டி விடலாம். இந்தப் பட்டத்தைச் சூட்டுகிறவர் அழுது கொண்டே சூட்டினாலும் அழகுதான்! இந்த அருமையான முறையை அழகுப் போட்டிக்காக மட்டும் சொல்லவில்லை. உண்மையாகவே சிலர் உலகத்தில் அழகைக் காண முடியாமல் அழுது திரிகிறார்கள். அவர்களுக்காக நான் கண்டு பிடித்துச் சொல்லும் அழகான முறை இதுதான். அழகான பெண்களைக் கல்யாணம் செய்துகொள்ள விரும்புகிறவர்கள் முதலில் அவளுக்கு அழத் தெரியுமா என்பதைப் பரிசை செய்து பார்க்கவேண்டும். புதிதாக ஒரு பெண்ணைப் பார்க்கப் போகும் வாலிபன் அவளுக்குப் பாடத் தெரியுமா என்று கேட்பதை விட அழத் தெரியுமா என்று கேட்பது புத்திசாலித்தனம். அந்தப் பெண்ணுக்கு அழத் தெரியாது என்று சொல்லி விட்டால் உடனே தயங்காமல் பாடச் சொல்லலாம். ஏனென்றால் சில பெண்களின் பாட்டும் அழுகையாய் இருப்பதுண்டு. இது கவனிக்க வேண்டிய முக்கிய விஷயம்.

விவாகமானவர்களுக்கு ஒரு யோசனை! அனேகம் பேர்களுக்குத் தங்கள் மனைவியிடம் அழகில்லை என்ற குறை இருப்பதுண்டு. இந்தக் குறையுள்ளவர் தங்கள் சகதர்மிணி அழுதே பார்த்திருக்க மாட்டார்கள் என்றுதான் நான் சொல்லுவேன். இப்படிப்பட்டவர்கள் தங்கள் மனைவிமார்களை அழவைத்துப் பார்த்தால் உள்ளத்தை உறுத்திவிற்கும் பெருங்குறை அறவே ஒழிந்துவிடும்.

சிலர் தங்கள் மனைவிகளை எப்படி அழவைப்பது என்று தெரியாமல் திணறலாம். சிலர் தங்கள் மனைவி அழுவதைப் பார்க்க அஞ்சுவார்கள். சிலர் தாங்களும் அவளோடு சேர்ந்து அழுவார்கள். ஆனால் இதற்கு அழுகையைக் கண்டு அஞ்சாத மனத் துணி





வும், அழுகையில் அழகைக் காணும் அபார ரஸிகத் தன்மையும்தான் வேண்டும்.

சில பெண்கள் சதா புருஷனை அழ வைத்துக் கொண்டிருப்பார்கள். அவர்களுக்குப் புருஷனை அழ வைத்து அந்த அழகைக் கண்டு ஆனந்தப்பட வேண்டுமென்ற நோக்கமிருக்கலாம். இப்படிப்பட்ட பெண்களை மனைவியாக அடைந்த பாக்கியசாலிகளுக்கு நாம் சொல்வதற்கு ஒன்றுமில்லை. தன்னை அழ வைக்க நினைக்கும் மனைவியை அழும்படி செய்ய அந்தப் பாக்கிய சாலிகளுக்குச் சாமர்த்தியமும் தைரியமும் வேண்டும்.

எப்பொழுதும் அழுகையிலேயே அழகைக் கண்டு ரஸிக்கும் புண்யாத்மாக்களில் நானும் ஒருவன். இது அனுபவ பூர்வமான உண்மை. என் மனைவி மகாலக்ஷ்மி அழுகையே அவதாரமானவள். அவள் கண் கலங்க விசித்து விசித்து அழும் அழகே அழகு. அவள் அழுவதற்காக அச்சாரம் கொடுக்க வேண்டாம். அது தானாகவே வரும். அந்த அழுகையின் அழகைக் கண்டு ரஸிப்பதில் நான் அலுப் படைந்ததே கிடையாது. மழை பெய்வதற்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்கிறார்கள். அது அவ்வளவு அவசியமில்லை. ஒரு நாளைக்கு என் மனைவி அழாமல் இருந்து விட்டால் அன்று கட்டாயம் மழை வந்து விடும். பாவம்! அவளுக்காக வானம் அழுது தீர்த்து விடும். மழையை நினைத்துக் கொண்டால் என் மனைவியின் அழுகை ஞாபகத்திற்கு வருகிறது. மழைக்கும் அவள் அழுகைக்கும் எவ்வளவு ஒற்றுமை தெரியுமா? வானத்தில் கார்மேகம் சூழ்ந்ததுபோல் முக மண்டலம் கருக்கும். இடி இடிப்பதுபோல் விக்கலும் விசிப்பும் ஏற்படும். புயல் வீசுவது போல் பெருமூச்சு எழும். கடைசியில் மழை பெய்வதுபோல் கண்ணீர் வெள்ளம் கரை புரண்டு ஓடும். இதற்குமேல் உவமை சொல்ல முடியாது. சொல்லவும் இடமில்லை. ஒரு நாளாவது என் மனைவி அழாவிட்டால் எனக்குச் சுவாரஸ்யப்படாது. அவளுடைய அழுகையால் ஏற்படக் கூடிய இன்பத்தையும் அழகையும் நான் தானே உணர்ந்து அனுபவிக்கப் பாக்கியம் செய்தவன்? சாதாரணமாகவே பெண்களைச் சுலபமாக அழ வைக்க வேண்டுமென்றால் சீக்கிரத்தில் பலனளிக்கக் கூடிய முறை ஒன்றே ஒன்றுதான். அதாவது அவர்களுடைய பிறந்த வீட்டைப் பற்றிச் சிறிது தாழ்மைப் படுத்திப் பேச வேண்டும்.

ஏதோ திடீரென்று நினைத்துக் கொண்டவன் போல் "மகாலக்ஷ்மி! உங்கள் அப்பா சுத்த அசடு" என்பேன். அவ்வளவுதான். உடனே அவள் மென்னியை யாரோ அழுத்திப் பிடித்து விட்டது போல் திணறியபடியே முகத்தைத் தூக்கிக் கொண்டு, "எங்கப்பா அசடு தான். நீங்க ரொம்ப சமர்த்து..." என்பாள். அதற்கப்புறம் வார்த்தையே இருக்காது. கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பிரவாக மெடுக்கும். இடி, புயல், மழைதான். அப்புறம் நாம் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் அந்த அழுகையின் அழகை ரஸித்துக் கொண்டிருக்கலாம். அலுப் படையும் வரையில் அந்த அழுகையை ரஸித்து விட்டு அதை நிறுத்த எண்ணினால் "வருகிறாயா கடைத் தெருவுக்குப் போவோம். ஏதோ ரவிக்கைக்குத் துணி வாங்கணும்னு சொன்னாயே!" என்றே. அல்லது "உன் தங்கை இந்திரா இருக்கிறாள் பாரு! அவள் ரொம்ப சூடிகை. மகா சமர்த்து" என்று அவளுடைய பிறந்தவீட்டு உருப்படிகள் எதையாவது புகழ்ச்சியாகவோ சொல்ல வேண்டும். உடனே ஓய்ந்துவிடும். சில சமயங்களில் காலையில் அவள் அழ ஆரம்பித்தால் இரவு ஒன்பது மணி வரையில் அவள் அழுகையை நிறுத்த எனக்கு மனம் வராது. அவள் அழுவதினால் வீட்டுக் காரியம் எதுவும் தடங்கல் படாது. அழுது கொண்டே சமைப்பாள். அழுது கொண்டே எனக்கு சாப்பாடு போடுவாள். அழுது கொண்டே சாப்பிடுவாள். அழுது கொண்டே குழந்தைகளைக் குளிப்பாட்டி, சாதம் ஊட்டித் தூங்கப் பண்ணுவாள். அவள் அழுகை தினசரி செய்ய வேண்டிய எந்தக் காரியத்தையும் கெடுத்துவிடாது. சிரித்துக் கொண்டே வீட்டுக் காரியங்களைச் செய்யும் மனைவிகளைப் படைத்த துர்ப்பாக்கியசாலிகளுக்கு அவர்கள் அழுத கோலத்தில் வீட்டுக் காரியங்களைச் செய்தால் எவ்வளவு உயர்ந்த அழகைக் கண்டு களிக்க முடிகிறது என்பதை அனுபவாயிலாகக் கண்டறியும்படி கேட்டுக் கொள்கிறேன். அழுகையில்தான் உயர்ந்த அழகு இருக்கிறது என்னும் உண்மையை அப்போது தான் அவர்கள் கண்டறிவார்கள்.

என் மனைவி ஊரில் இல்லாத சமயத்தில் இதை நான் எழுதுகிறேன். அவள் பக்கத்திலிருந்தால் இதை நான் எழுத முடியாது. அவளுடைய அழுகையின் அழகு என் கவனத்தை இழுத்திருக்கும். ஆனால் அவள் ஊரிலிருந்து வந்ததும் இதைப் படித்து அழத்தான் போகிறாள். அதை நான் ஆனந்தத்தோடு ரஸிக்கத்தான் போகிறேன்.




கோடி ரெட்டி பணக்காரர் வீட்டுப் பிள்ளை; நவீன நாகரிகத்தில் மூழ்கித் திளைத்தவன்.

அவன் தனக்கு விவரம் தெரிந்ததிலிருந்து ஹோட்டலிலேயே சௌக்கியமாகச் சாப்பிட்டுக் கொண்டு தன் படிப்பை முடித்தான். அப்போதெல்லாம் அவன் மற்றப் பையன்களைப் போல் பெற்றோரை நினைத்துக் கொண்டு அடிக்கடி சொந்த ஊருக்குப் போவதில்லை.

கோடி ரெட்டியின் தந்தையான லாச்சி ரெட்டியும் தம்முடைய ஏக புதல்வனுக்காகப் பட்டணத்தில் தனி ஜாகை வைக்க விரும்பவில்லை. அவனை நினைத்துக் கொண்டு அடிக்கடி அவன் இருக்கும் இடத்துக்கு வருவதில்லை.

கோடி ரெட்டி படிப்பிலும் பட்டணத்து வாழ்க்கையிலும் தீவிரமாக ஈடுபட்டிருந்தது போல, அவனது தந்தை தமது கிராமத்தை விட்டு வெளிக்கிளம்பாமல் விவசாயத்தில் வெகு தீவிரமாக ஈடுபட்டிருந்தார். அவருக்குத் தமது புதல்வனை அடிக்கடி பார்த்தாலும் பார்க்காவிட்டாலும், நாள் தவறாமல் தம்முடைய வயல்களைப் பார்த்தாக வேண்டும்.

தொழிலாளர்களுடன் சேர்ந்து அவரும் உழைத்ததால் அவரது நிலங்கள் மற்றவர்களின் நிலங்களைக் காட்டிலும் அதிகமாக விளைந்தன. அவருக்கு ஏராளமான நிலங்கள் இருந்தும் கூட அவர் சாதாரணத் தொழிலாளர்களைப் போல் வேலை செய்ததால் அவரிடம் ஜனங்களுக்கு மிகுந்த மதிப்பு ஏற்பட்டது. லாச்சி ரெட்டி தமது நிலங்களில் வேலை செய்வோருக்கு மற்றவர்களைக் காட்டிலும் அதிக நெல்லும் சம்பளமும் உடைகளும் கொடுத்து வந்ததால் வேலையாட்களின் அன்பையும் விசுவாசத்தையும் பெற்றிருந்தார்.

ஆனால் லாச்சி ரெட்டி காலமாகி, நிலங்களின் நிர்வாகத்தை அவரது புதல்வனான கோடி ரெட்டி ஏற்றுக் கொண்டதும் நிலைமை முற்றிலும் மாறத் தொடங்கியது. லாச்சி ரெட்டி காலத்தில் அவரது குடும்பத்துக்கு அருள் புரிந்து வந்த கிராமத்துத் தெய்வம் கூடக் கோடி ரெட்டி குடும்பத்தின் விஷயத்தில் சிரத்தை காட்டவில்லை என்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள்!

கோடி ரெட்டி தங்கள் குடும்பத்தினர் பரம்பரையாக வாழ்ந்து வந்த பழைய வீட்டை இடித்து விட்டு, அந்த இடத்திலே உருவத்தில் ரேடியோவைப் போல ஒரு நவீன பங்களாவைக் கட்டி விட்டான்.

பழைய வீட்டுக்குப் பின்புறத்தில் இருந்த மாட்டுக் கொட்டிலையும் இடித்து விட்டு, சிறிது தூரத்துக்கு அப்பால் நவீன முறையில் மாட்டுப் பண்ணை ஒன்றை நிர்மாணிக்க ஏற்பாடு செய்தான். பால் கறப்பதற்காகப் பல வித நவீனக் கருவிகள் தருவிக்கப்பட்டன.

எனினும் இதெல்லாம் அந்தக் கிராமத்தில் உள்ள வயோதிகர்களுக்குப் பிடிக்கவில்லை. யந்திரக் கருவிகளைக் கொண்டு மாடுகளைக் கறப்பதையும், தாய்ப்பாலின்றிக் கன்றுக் குட்டிகளை வளர்ப்பதையும் அவர்கள் ஆட்சேபித்தனர்.

* * *

கோடி ரெட்டி தன் மனைவி காந்தத்தின் மீது உயிரையே வைத்திருந்தான். மிகவும் ரூபவதியான காந்தத்தின் முகம் சிறிது வாடினாலும் அவனால் சகிக்க முடியாது. செந்தாமரை போன்ற அவளது கன்னங்களின் பிரகாசம் சிறிது குன்றினாலும் அவன் பதறி விடுவான்.

வீட்டு வேலைகளைக் கவனிப்பதற்குச் சில வேலைக்காரப் பெண்கள் இருந்தும்கூட காந்தத்துக்குப் பணி விடை செய்வதற்கென்று பிரத்தியேகமாக ஆச்சாளுவை நியமித்திருந்தான்.

மெத்தை, கட்டில்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வது, காந்தத்துக்கு அலங்காரம் செய்வது இவை போன்ற அலுவல்களை ஆச்சாளு கவனித்து வந்தாள். ஆச்சாளு ஒரு நாளைக்கு இல்லா விட்டால்கூடக் காந்தத்துக்குக் கஷ்டமாக இருக்கும்.

வழக்கம்போல் அன்றிரவும் கோடி ரெட்டி சாப்பிட்ட பின் வெற்றிலை போட்டுக் கொண்டு உல்லாசமாகக் காந்தத்தின் அறைக்கு வந்தான். அப்போது காந்தம் நிலைக் கண்ணாடியின் எதிரில் நின்று கொண்டிருந்தாள். ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருப்பவள் போல் தோன்றினாள்.

அவளுக்குப் பின்புறமாக வந்த கோடி ரெட்டி அவள் இரு தோள்களிலும் அன்புடன் கையை வைத்தான்; கண்ணாடியில் அவளுடைய பிரதிபிம்பத்தைப் பார்த்துப் பரவசம் அடைந்தான்.

"காந்தம்! உன் உடம்புக்கு ஒன்றும் இல்லையே! உன் முகம் ஏன் ஒரு தினுசாக இருக்கிறது!" என்று கேட்டான்.

காந்தம் நாணிக் கோணிக் கொண்டாள். "நான் உங்களிடம் எப்படிச் சொல்லுவது!" என்றாள்.

கோடி ரெட்டி புத்திசாலி அல்லவா! விஷயத்தைத் தெரிந்து கொண்டான். "அதற்குள்ளாகவா! நீ இங்கு வந்து இன்னும் நாலு மாதங்கள் கூட ஆகவில்லையே!" என்று ஆச்சரியப்பட்டான்.

காந்தத்துக்கு வெட்கமாக இருந்தது. கர்ப்பிணியான அவள் தன் கணவனின் முகத்தைப் புன்முறுவலுடன் பார்த்தாள். அவளது பார்வை, "அது என் குற்றமா!" என்று அவனைக் கேட்பது போல் இருந்தது!

"இதற்கு ஏன் இவ்வளவு வெட்கப்படுகிறாய்!" என்று அவன் சொல்லி அவளை அன்புடன் அணைத்துக் கொண்டான்.

* * *

ஆச்சாளு பிரசவத்துக்காகத் தன் வீட்டுக்குப் போய் ஒரு மாதமாகி விட்டது. அவள் அருகில் இல்லாமல் காந்தத்துக்குப் பொழுதே போகவில்லை.

"நமது மாட்டுப் பண்ணையை நான் பார்த்ததே இல்லையே. என்னை ஒரு நாள் அழைத்துக் கொண்டு போய்க் காட்டக் கூடாதா!" என்றாள் காந்தம் கொஞ்சும் குரலில்.

"அடே அப்பா! இது எவ்வளவு பெரிய காரியம்!" என்றான் கோடி ரெட்டி பரிகாசமாக.

மறு நாள் அவ்விருவரும் மோட்டாரில் மாட்டுப் பண்ணைக்குச் சென்றனர். அங்கு காந்தம் கண்ட சில காட்சிகள் அவளைத் திடுக்கிடச் செய்தன.

இரண்டொரு ஆட்கள் பசுமாடுகளின் மடியில் ஏதோ கருவிகளை வைத்துப் பால் கறந்து கொண்டிருந்தனர். மாடுகளின் பக்கத்தில் கன்றுக் குட்டிகளைக் காணவில்லை.

"கன்றுக்குட்டிகள் எங்கே! பால் கறப்பதற்கு முன் ஊட்டுவதற்குக் கன்றுக்குட்டிகளை விடுவதில்லையா!" என்றாள் காந்தம்.

"கன்றுக்குட்டிகளை மாடுகளுக்கு அருகில் கூடச் செல்லுவதற்கு நமது ஆட்கள் விடமாட்டார்கள். அவ்விதம் விட்டால் கன்றுக் குட்டிகள் எல்லாப் பாலையும் குடித்து விடும். பிறகு அவைகளுக்கு அஜீரணம் ஏற்படும். ஆதலால் ஒவ்வொரு வேளையும் பாலை அளந்து குழாய் மூலம் கன்றுக் குட்டிகளுக்குக் கொடுக்கிறார்கள். தவிர கன்றுக் குட்டிகள் மாட்டின் மடியில் வாயை வைத்தால் நாம் கறக்கும் பால் அசுத்தமாகிவிடும் அல்லவா!"

"அப்படியானால், கன்றுக்குட்டி இராமல் மாடும், மாடு இராமல் கன்றுக்குட்டியும் ஏங்கி விடாதா! கன்றுக் குட்டி ஊட்டாவிடில் மாடுகள் சரியாகப் பால் கொடுக்குமா!"

"சில மாடுகள் கன்றுக்குட்டி இராவிட்டாலும் எதிரில் பருத்திக்கொட்டை, பிண்ணாக்கு வைத்தால் பால் கொடுத்து விடும். சில மாடுகள் கொடுக்காது. அத்தகைய மாடுகள் பால் கொடுக்கும் வரையில் இந்தக் கருவிகளை மடியில் வைத்து இறுக்குவார்கள். மாட்டின் மடியில் ஒரு சொட்டுப் பால் பாக்கி இராமல் கிரகிக்கும் சக்தி இந்தக் கருவிக்கு உண்டு. அவ்வாறு இறுக்கும் போது சில மாடுகளின் மடியிலிருந்து இரத்தம் கூட வருவது உண்டு. இரத்தம் வர ஆரம்பித்தால் உடனே கருவியை எடுத்து விடுவோம். இதன் பலனாக நமக்கு அதிகப் பால் கிடைக்கிறது. வருமானமும் அதிகமாக வருகிறது."

இந்த விவரங்களைக் கேட்கவே காந்தத்துக்கு மிகவும் அருவருப்பாக இருந்தது.

"இந்த முறைகளினால் நமக்கு வருமானம் அதிகமாகியிருக்கலாம். ஆனால் வாயில்லா ஜீவன்களிடம் இவ்வாறு நடந்துகொள்வது நியாயமா!" என்று கூறியவாறே வீட்டுக்குப் புறப்பட்டான் காந்தம்.

* * *

பிரசவத்தின்போது காந்தத்தின் நிலைமை மிகவும் கவலைக்கிடமாகியது. மூர்ச்சையுற்றிருந்த அவள் அடிக்கடி 'வாயில்லா ஜீவன்கள்' 'வாயில்லா ஜீவன்கள்' என்று பிதற்றிக் கொண்டிருந்தாள்.

காந்தத்துக்கு ஆண் குழந்தை பிறந்த தெனிலும், அவளுக்கு மூன்று நாள் வரையில் பிரக்ஞை வரவில்லை. அதன் பிறகு அவள் குழந்தைக்குப் பால் கொடுக்கக் கூடாது என்று லேடி டாக்டர் கண்டிப்பாகக் கட்டளையிட்டு விட்டாள்.

எனவே காந்தத்தின் குழந்தை, பிரசவித்து இரண்டு மாதம் கழித்துத் திரும்பி வந்த ஆச்சாளுவின் பராமரிப்பில் விடப்பட்டது. அவளே காந்தத்தின் குழந்தைக்குப் பால் கொடுத்து வந்தாள். அதன் காரணமாக ஆச்சாளு எப்போதும் காந்தத்தின் வீட்டில் இருந்ததால் அவளுடைய சொந்தக் குழந்தைக்கு அரிசிக் கஞ்சிதான் கிடைத்துவந்தது.

கோடி ரெட்டியின் தூண்டுதலால்தான் லேடி டாக்டர் அவ்வாறு கட்டளை யிட்டாள் என்பது காந்தத்துக்கு எப்படித் தெரியும்! எனவே, தன் கணவன் கன்றுக் குட்டிகளையும் மாடுகளையும் பிரித்து வைத்த பாவத்தினால்தான், தான் தன் சொந்தக் குழந்தைக்குப் பால் கொடுக்க முடியாமல் போயிற்று என்று அவள் வருந்தினாள்.

காந்தத்தின் அழகுக்குச் சிறிதும் பழுது ஏற்படக்கூடாது என்பதற்காகவே கோடி ரெட்டி லேடி டாக்டர் மூலம் அவ்வாறு கட்டளை பிறப்பிக்கச் செய்தான்.

கோடி ரெட்டியின் குழந்தைக்குப் பால் கொடுக்கும் பொறுப்பை ஏற்றதும் ஆச்சாளுவின் மாதச்



சம்பளம் பதினைந்திலிருந்து முப்பது ரூபாயாக உயர்ந்தது. சம்பளத்தைத் தவிர ஒரு வேளை சாப்பாடும் அவளுக்கு அங்கேயே கிடைத்து வந்தது.

ஒரு காலத்தில் நல்ல பலசாலியாகவும் நாலாறு ஆட்களுக்கு மேஸ்திரியாகவும் இருந்து கைநிறையச் சம்பாதித்துக் கொண்டிருந்த அவளுடைய கணவன் முடக்கு வாதத்தினால் வேலை செய்ய முடியாமல் வீட்டிலேயே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கிழவியான மாமியாரும் வீட்டிலேயே இருந்தாள். அந்த நிலைமையில் தன் குடும்பத்தைப் பராமரிக்க வேண்டிய முழுப் பொறுப்பும் ஆச்சாளுவின் தலையில் விழுந்தது. எனவே, தனக்கு முப்பது ரூபாய் சம்பளம் கிடைக்கப் போவதை நினைத்து ஆச்சாளு ஆனந்தம் அடைந்தாள்.

அவள் தன் சொந்தக் குழந்தையை மாமியாரின் பராமரிப்பில் விட்டு விட்டுச் சம்பளத்துக்காகக் கோடி ரெட்டியின் குழந்தைக்குத் தாயாக இருந்தாள். அதனால் அவள் சிற்சில சமயம் இரவு நேரங்களில் கூடக் கோடி ரெட்டியின் வீட்டிலேயே இருக்க நேர்ந்தது. அவளது சொந்தக் குழந்தையோ வெளியில் அவளுடைய மாமியார்க் கிழவியின் பராமரிப்பில் நொய்க் கஞ்சியைக் குடித்துக் கொண்டு நோஞ்சலாக வாழ்ந்து வந்தது.

எப்போதாவது கோடி ரெட்டியும் காந்தமும் தங்களுடைய குழந்தையைக் கொஞ்சுவதற்காக வந்தால் அது வீறிட்டு அழுது கொண்டு ஆச்சாளுவை இறுகக் கட்டிக் கொள்ளும்.

அது போலவே ஆச்சாளு தன் வீட்டில் இருக்கும் போது தன் சொந்தக் குழந்தையைக் கொஞ்ச முற்பட்டால் அது அழுவதற்குக் கூடச் சக்தியில்லாமல் ஈனக் குரலில் முனகும்; தன் பாட்டியின் புடவையை இறுகப் பிடித்துக் கொள்ளும். ஆச்சாளுவோ மனவேதனை காரணமாக ஒரு பெருமூச்சுவிட்டுக் கொண்டு போய்விடுவாள்.



இரவு பகலாகக் கோடி ரெட்டி வீட்டிலேயே இருப்பதைக் குறித்து ஆச்சாளுவின் கணவனும் அவளை அவதூறாகப் பேசத் தொடங்கினான்.

அத்தகைய சந்தர்ப்பங்களில் அவனுடைய தாயார் ஆச்சாளுவுக்காகப் பரிந்து பேசுவாள்.

"ஏன் இப்படி வெறி பிடித்தவனைப் போல் கத்துகிறாய்! அவள்மீது என்ன குற்றம்! அவள் சம்பாதித்துப் போடவில்லையென்றால் உன் கதியும் என் கதியும் குழந்தையின் கதியும் என்ன ஆகும்!" என்று சொல்லி மகனைக் கண்டிப்பாள்.

"அழாதே அம்மா! அவனுக்கு எழுந்து நடமாட உடம்பில் சக்தியில்லை. ஆனால் உன்னை அதட்டுவதற்கு மாத்திரம் எங்கிருந்தோ சக்தி வந்து விடுகிறது!" என்று சொல்லி ஆச்சாளுவைச் சமாதானம் செய்வாள்.

* * *

ஆச்சாளுவின் சொந்தக்குழந்தை அவளிடம் வருவதில்லை. காந்தத்தின் குழந்தையோ ஆச்சாளுவை விட்டுப் பிரிவதில்லை. அதனால் அவளுக்குக் காந்தத்தின் குழந்தையின்மீது தன்னை அறியாமல் ஒருவிதமான பாசமும் ஏற்படலாயிற்று.

கோடிரெட்டி தன் குழந்தைக்கு விதம் விதமான விலையுயர்ந்த விளையாட்டுப் பொம்மைகளை வாங்கிக் கொடுத்தான். அந்தப் பொம்மைகளில் சில சாவி கொடுத்தால் சிரிக்கும்; சில நடக்கும்; மற்றும் சில சுற்றிச் சுற்றி நடனமாடும்.

ஆனால் அந்தப் பொம்மைகளையெல்லாம் அவனது குழந்தை லட்சியம் செய்யவில்லை. இரண்டு அணாவுக்கு ஆச்சாளு அன்புடன் வாங்கிக்கொடுத்த மண் குருவிப் பொம்மை ஒன்றையே அது எப்போதும் கையில் வைத்துக் கொண்டிருந்தது. இரவு நேரத்தில் அது அழும்போது காந்தம் எவ்வளவு சமாதானம் செய்தாலும் அதன் அழுகை நிற்காது. ஆனால் அந்த மண் பொம்மையை எடுத்துக் கொடுத்தால் அதன் அழுகை நின்று விடும்! பகலில் கூட அந்தக் குழந்தை மேற்படி மண் பொம்மையையே எப்போதும் கையில் வைத்துக் கொண்டிருக்கும்.

இயற்கைக்கு விரோதமான இந்த நிலைமை காந்தத்தின் மனதைக் கிளறியது. இருந்தாலும் அவள் என்ன செய்வது! தன் கணவனை கோடி ரெட்டியின் கண்டிப்பான உத்தரவை மீறும் துணிச்சல் அவளுக்கு இல்லையே!

ஆச்சாளுவுக்குப் பட்டினி கிடக்காமல் தன் குடும்பத்தைக் காப்பாற்ற முடிந்ததெனினும், அவள் மனதை நாளுக்கு நாள் வேதனை அரித்துத் தின்று வந்தது. அவளுடைய குழந்தை நாளுக்கு நாள் பலவீனம் அடைந்து வந்தது. அடிக்கடி அது அழுததால் அவளுடைய கணவன் குழந்தை உள்பட வீட்டில் எல்லாரையும் தூற்ற ஆரம்பித்தான். "எனக்கு உடம்பு சொஸ்தமாகட்டும்; எல்லோருடைய எலும்பையும் முறித்து விடுகிறேன்" என்பது அவனுடைய பல்லவியாயிருந்தது.

தன் குழந்தை தான் பால் கொடுத்தாலும் அதைக் குடிக்காமல் நொய்க் கஞ்சியை ஆர்வத்துடன் குடிப்பதைப் பார்த்த ஆச்சாளுவுக்கு இருதயம் வெடித்து விடும்போல் இருந்தது.

ஆச்சாளு இராத சமயங்களில் பிடிவாதமாக அழுத தங்கள் குழந்தையைக் காந்தமும் கோடி ரெட்டியும் அடிக்க ஆரம்பித்தார்கள்.

ஒரு நாள் இரவு கோடி ரெட்டி தன் தூக்கத்தைக் கலைத்த அந்தக் குழந்தையைச் சிறிதும் இரக்கமின்றிக் கடுமையாக அடித்து விட்டான். குழந்தை வெகு நேரம் வரையில் அழுது கொண்

டிருந்தது. பிறகு தூங்கி விட்டது. எனினும் காலையில் ஆச்சாளு வந்தபோது கூட அதன் விசிப்பு அடங்கவில்லை.

ஆச்சாளுவைக் கண்டதும் குழந்தை அவளிடம் பாய்ந்து சென்று, விம்மி விம்மி அழுதது. பேசத்தெரியாத அந்தக் குழந்தையின் அழுகையைக் காட்டிலும் தெளிவான பாஷை என்ன இருக்கிறது! உடனே ஆச்சாளு சகல விவரங்களையும் தெரிந்து கொண்டாள். குழந்தையை அன்புடன் தழுவிக் கொண்டாள். அவள் கண்களிலும் இரத்தக் கண்ணீர் ததும்பியது.



அந்தப் பரிதாபமான காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த காந்தமும் விம்மி விம்மி அழுதாள். அவளுடைய வாழ்க்கையில் அவள் அழுதது அதுதான் முதல் தடவையாகும். அவளுக்குக் கோடி ரெட்டியின்மீது வெறுப்பு ஏற்பட்டது.

ஆச்சாளு தன் மடியில் படுத்துக் கொண்டிருந்த காந்தத்தின் குழந்தைக்குப் பால் கொடுத்தாள் என்றாலும், அவள் மனம் அவளுடைய வீட்டில் நாளுக்கு நாள் பலவீனம் அடைந்து வரும் தன் குழந்தை மீது லயித்திருந்தது.

* * *

அந்த வருஷத்திலே அக் கிராமத்தில் வைசூரி நோய் மிகவும் கடுமையாக இருந்தது. அதற்கு முன் எக்காலத்திலும் வைசூரியால் அவ்வளவு அதிக உயிர்ச் சேதம் ஏற்பட்டதில்லை என்று எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள்.

"இந்தக் கிராமத்தில் நடக்கும் அக்கிரமங்களைக் கண்டு மாரியம்மனால் சகிக்க முடியவில்லை. அதனால்தான் அவள் இவ்விதம் கோபம் கொண்டிருக்கிறாள்" என்று வயோதிகர்கள் முணு முணுத்தனர்.

உடனே கோடி ரெட்டி அதிகாரிகளுக்கு எழுதி, கிராமத்தில் உள்ள எல்லோருக்கும் அம்மை குத்தும்படி செய்தான்.

ஆச்சாளுவின் குழந்தைக்கும் காந்தத்தின் குழந்தைக்கும் வைசூரி கண்டது.

அப்போது ஆச்சாளு அடைந்த மனோவேதனையைச் சொல்லி முடியாது. அவள் தன் வீட்டில் இருந்து கொண்டு அவளுடைய குழந்தையைக் கவனிப்பதா! தன்னை விட்டுப் பிரியாத காந்தத்தின் குழந்தையைக் கவனிப்பதா!

காந்தத்தின் குழந்தை வைசூரி போட்டிய பின், அது தொத்து நோய் என்றும் ஆகையால் குழந்தையின் அருகில் கூடக் காந்தம் செல்லக்கூடாது என்றும் கோடி ரெட்டி கட்டளையிட்டான்.

எனவே தன் சொந்தக் குழந்தையைக்கூடக் கவனிக்காமல் ஆச்சாளு காந்தத்தின் குழந்தையின் அருகிலேயே இரவு பகலாக இருக்க நேர்ந்தது. ஆச்சாளு தன் சொந்த வீட்டில் இருந்தாலும் அவளுடைய குழந்தைக்கு அவள் என்ன உதவி செய்ய முடியும்! அவளைக் கண்டாலேதான் அவள் குழந்தை அலறுகிறதே!

ஆச்சாளுவின் தர்ம சங்கடத்தை உணர்ந்த கோடி ரெட்டி அவளுடைய குழந்தையையும் தன் வீட்டுக்கே கொண்டு வந்து விடுமாறு கூறினான். ஆனால் அதற்கு அவள் இணங்கவில்லை. அவள் குழந்தை அதன் பாட்டியை விட்டுப் பிரிந்து இராது என்பது அவளுக்குத் தெரியும் அல்லவா!

காந்தத்தின் குழந்தை பிரக்ஞையற்றுக் கிடந்தது. ஆச்சாளு கொடுத்த மண் குருவிப் பொம்மையை அது இறுகக் கையில் பிடித்துக் கொண்டிருந்ததைத் தவிர அது உயிருடன் இருக்கிறது என்பதற்கான அறிகுறி எதுவும் தெரியவில்லை.

திடீரென்று குழந்தையின் கைப்பிடி தளர்ந்தது. கட்டிலில் படுத்திருந்த குழந்தையின் கையிலிருந்த மண் பொம்மை கீழே விழுந்ததில் சுக்கு நூறாகி விட்டது.

ஆச்சாளு 'அம்மா, அம்மா' என்று அலறினாள். தன் கணவனின் கட்டளையை மறந்து காந்தம் உள்ளே ஓடி வந்தாள். பொம்மை கீழே விழுந்து உருத்தெரியாமல் உடைந்திருப்பதைக் கண்டதும் அவளுக்குத் தன் உள்ளமே உடைந்து கீழே சிதறிக் கிடப்பதுபோல் தோன்றியது.

ஆச்சாளு விம்மி விம்மி அழுதாள். இச் சந்தர்ப்பத்தில் ஆச்சாளுவின் வீட்டிலிருந்தும் அவசரமாக ஆள் வந்து சேர்ந்தான்.

அன்றிரவு முழுவதும் அந்தக் கிராமத்தில் இரண்டு பேர் தூங்கவே யில்லை.

"கேவலம் உன் தேகத்தின் அழகுக்காக நீ உன் அருமைக் குழந்தையைத் தியாகம் செய்தாய்" என்று காந்தத்தை அவள் மனம் இடைவிடாமல் இடித்துக் காட்டியது.

"முப்பது ரூபாய் சம்பளத்துக்காக நீ உன் சொந்தக் குழந்தையைப் பலிகொடுத்தாய்" என்று ஆச்சாளுவின் மனம் அவளை வாட்டி வதக்கியது.

---



கணவன்:—கோடி வீட்டுச் சுப்பு அவன் மனைவியை அடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தேன்...

மனைவி:—நீங்கள் அதையெல்லாம் போய்ப் பார்த்துக்கொண்டு வராதீர்கள்.



# அழகிற்கான அரிய சாதனம் 'ஓடின்'

*Every year greater numbers of discriminating ladies turn to the regular use of* ***O A T I N E*** *beauty creams.*

***"Cream at night, snow by day, gives loveliness the Oatine way."***



**Oatine** **Snow & Cream**

Make sure seal is unbroken



# ஆனந்த வாழ்க்கை

திருப்தி மிளிர்கிறது அவர் முகத்தில். அவள் கையால் ஆசையுடன் போட்டுக் கொடுத்த அந்த ஒரு டம்ளர் 'டீ'யைக் குடித்தார். நாள் முழுவதும் ஆபீஸில் உழைத்த அவர் களைப்பு பறந்தோடி விட்டது. உற்சாகம் அடைகிறார். இனி மனைவியுடன் சரச சல்லாபம், குழந்தைகளுடன் விளையாட்டு. ஆனந்த வாழ்க்கைக்கு வேறு என்ன வேண்டும்?

தினம் கணவன் வீடு திரும்புகையில் அவள் ஆவலுடன் மட்டுமல்லாது முன் யோசனையுடன் ஒரு டம்ளர் 'டீ'யுடன் எதிர்பார்க்கிறான்.

உற்சாகமளிக்கும் 'டீ' போடுவது எவ்வளவு சுலபம்! செலவுக்கு செலவும் குறைவு; நொடிப்பொழுதிலே தயாரித்து விடலாம். நல்ல 'டீ'யை தினம் ரஸித்துக் குடியுங்கள்.

## மந்திர சக்தியுள்ள 'டீ'யைக் குடியுங்கள்.



சென்ட்ரல் டீ போர்டாரால் வெளியிடப்பட்டது.

C.1

# இரண்டு உள்ளங்கள்

மாயா

தனக்குச் சற்றுத் தூரத்தில் தரையிலே கிடந்த அந்தக் கிலுகிலுப்பையையே வெறித்துப் பார்த்தபடி இருந்தான் குழந்தை பாலு. அதைத் தாவி யெடுத்துக் கையாள வேண்டுமென்ற ஆசையும் ஆர்வமும் அவன் உள்ளத்திலிருந்து பொங்கி வழிந்து கண்களின் வழியே எட்டிப் பார்த்தன. செயலின்மை அவன் உடலையே அடிமை கொண்டிருந்ததனால் அத்தனை ஆசையும் விழிகளிலேயே தேங்கிக் கிடந்தது.

பாலு அதே நிலையில் கிலுகிலுப்பையை அதிசயக் கண்களோடு பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். அவன் கால்கள் நீட்டியபடி கிடந்தன. அவற்றை அவன் மடக்க முடியாது. அவற்றை ஊன்றி நிற்கும்படி அவன் பிறக்கவில்லை.

அப்பொழுதுதான் மாடி யறையிலிருந்து கீழே இறங்கி வந்து கொண்டிருந்தான் சந்துரு. கண்களில் மிதமிஞ்சிய ஆவலோடு தன் அப்பாவையும் அந்தக் கிலுகிலுப்பையையும் மாறி மாறிப் பார்த்தான் பாலு. அந்தக் கிலுகிலுப்பையைத் தன் கையில் எடுத்துத் தர வேண்டும் என்பதை அவன் பார்வை சொல்லாமற் சொல்லியது.

அந்தக் குழந்தையின் பரிதாப நிலையைக் கண்ட சந்துரு மாடிப்படிகளில் நின்றவாறே கிலுகிலுப்பையை எடுத்துத் தரலாமா வேண்டாமா என்று யோசிக்கலானான்.

அதற்குள் எங்கிருந்தோ வந்தான் சேகர். இரு கைகளையும் முழங்கால்களையும் ஊன்றியவாறு தாவித் தாவி தரையினூடே தவழ்ந்து வந்தான். கிலுகிலுப்பையைக் குறி வைத்து எழும்பி எழும்பித் தவழ்ந்தான். நாலே எட்டில் ஓடி வந்து கிலுகிலுப்பையைக் கைகளில் எடுத்துக் கொண்டு ஓடி விட்டான்.

மாடிப்படிகளிலேயே நிலைத்து நின்று கொண்டிருந்த சந்துருவை நிகழ்ந்த சம்பவம் உலுக்கி எடுத்தது. அவன் சிந்தனைக்கு முற்றுப் புள்ளி வைத்தது சேகரின் செயல் என்றாலும், அது ஒரு புதுப்புயலுக்குக் காரணமும் ஆகிவிட்டது.

ஐந்து வயதுடைய தன் பிள்ளையால் ஆகாத ஒரு அற்பச் செயலை ஒன்றரை வயதே நிரம்பிய அவன் தம்பி பிள்ளை சேகர் செய்து விட்டான்! பெற்ற மனம் பொறுக்கக் கூடியதா இது! அவ்வளவுதான்; அவன் உள்ளத்தில் சண்டமாருதம் வீச ஆரம்பித்தது. ஆகவே, கீழே தன்னை அழைத்த காரியத்தையும் மறந்து மறுபடியும் மாடியில் சென்று அமர்ந்து விட்டான். சித்த வண்டு ரீங்காரமிடத் தொடங்கி விட்டது.

* * *

குடும்பத்தின் சீமந்த புத்திரனாகச் சந்துரு பிறந்தான். சிவப்பாக, அழகாக அற்புதமாகப் பிறந்தான். அவனை யடுத்து இரண்டு வயது இளையவனாக வாசு பிறந்தான். அந்தக் குடும்பத்தில் தப்பிப் பிறந்தவனாக இருந்தான் அவன். ஏனெனில் அவன் நல்ல கறுப்பு. ஆகவே, அழகனான சந்துரு ஆதரவுடனும் அழகற்றவனான வாசு ஆதரவுக் குறைவுடனும் வளர்ந்து வந்தார்கள்.

சந்துருவுக்கு எஸ். எஸ். எல். ஸி. படிப்பு வெற்றிகரமாக முடிந்த பொழுது வாசு ஐந்தாம் பாரத்தில் தவறி விட்டான். வெற்றியின் பெருமிதத்தில் மிதந்த சந்துருவுக்கு வாசுவின் தோல்வியை ஏளனம் செய்யச் சந்தர்ப்பம் கிடைத்தது. வீட்டிலுள்ளவரின் 'கோரஸி'ல் சந்துருவின் குரல் தனித்துக் கேட்டது. நல்ல நாளிலேயே வாசு என்றால் ஒரு இளக்காரம் செய்வது அந்தக் குடும்பத்துக்குப் பழகிப் போன செய்கை. அதிலும் பரீட்சை தவறிய வாசுவை யார் மதிக்கப் போகிறார்கள்! சந்துரு நிமிர்ந்து நடந்தான்.

படிப்பை முடித்துக் கொண்ட சந்துரு உத்தியோகத்தில் புகுந்தான். வழக்கம் போல வரன்கள் வந்து குவிந்தன. ஜாதகம், லௌகீகம் ஆகிய பிரச்னைகள் மனம் ஒத்திருந்தும் பெண் பார்க்கும் படலம் வந்ததும் பல பெண்கள் நிராகரிக்கப்பட்டனர். இரண்டு வருடங்கள் இம்மாதிரி கழியவே, அவன் பெற்றோருக்குக் கல்யாணம் என்று நடந்தால் போதுமென்றாகி விட்டது. ஆகவே, கடைசியில் ஒரு கிராமத்துப் பெண்ணைச் சந்துருவின் சம்மதம் பெற்று மணம் முடித்து வைத்தார்கள். சந்துருவின் கல்யாணத்தன்று வாசு 'இண்டர்' வகுப்பில் மாகாணத்திலேயே முதன்மையாகத் தேர்ச்சியடைந்த செய்தி கிடைத்தது. ஐந்தாம் பாரத்தில் தவறிய வாசு எப்படி எல்லோரையும் தூக்கியடித்து விட்டான் என்பது சந்துருவுக்குப் புரியவே யில்லை. சகோதரத்துவ நிலத்தில் பொறாமையின் விதை விழுந்தது. அத்தகைய வெற்றி தனக்குக் கிடைத்திருந்தால் எத்தனை மகிழ்ச்சியோடு இருக்கலாம் என்ற ஏக்கம் அவனை ஆட்கொண்டது. கல்யாணத்தைக் கூட ரசிக்க முடியாமற் செய்து விட்டது அந்த நிகழ்ச்சி.

சந்துரு, தன் மணவாழ்க்கையில் காணத் துடித்த இன்பங்களைக் காண முடியாது தவித்தான்.

படிப்பினால், பாட்டினால், அழகால், பழகும் முறையால் இப்படிப் பலவிதத்தில் ஒரு விதத்திலும் சாரதா தேர்ந்தவளாக இல்லை. வாழ்வோடு லயிக்க முடியாமல் போன பொழுதும் சந்துரு தன் சலிப்பை வெளிக் காண்பிக்காமல் கூடியவரை மறைக்க முயன்றான். சாரதா, தாயாகப் போகும் செய்தி யறிந்ததும் குழந்தையின் அழகிலாவது தாங்களிருவரும் நெருங்கிக் கலந்து பழக முடியும் என்று அவன் நம்பியிருந்தான்.

* * *

வாசுவிற்கு என்ஜினீரிங் பரீட்சையின் முடிவு வெளியாகு முன்னரே வேலைக்கு உத்தரவு வந்து விட்டது. சந்துருவைவிட இரட்டிப்புச் சம்பளத்தில் அவனுக்கு வேலை கிடைத்தது. சிபாரிசுக் கடிதங்களைச் சுமந்து கால் தேய எவ்வளவோ இடங்களுக்கு ஏறி இறங்கி அலைந்து, கடைசியில் இந்த நூறு ரூபாய்ச் சம்பளத்தில் தான் அமர்ந்ததை இந்தச் சமயம் சந்துருவால் நினைத்துப் பார்க்காமலிருக்க முடியவில்லை.

வாசுவிற்கும் கல்யாணப் பேச்சுகள் தொடங்கின. வாசுவோ அதில் அதிகம் சிரத்தை கொண்டவன் போல் தோன்றவில்லை. பெண் பார்க்கத் தான் வரவில்லையென்றும் பெற்றோர்கள் பார்த்து முடித்தால் போதுமென்றும் சொல்லி விட்டான். முதன் முதலாகப் பார்த்த வரனே வாசுவிற்கு நிச்சயமாகி விட்டது. கல்யாணத்தன்றுதான் சந்துரு பெண்ணைப் பார்த்தான். சாரதாவோடு அவளை ஒப்பிட்டுப் பார்க்க அவன் மனம் முனைந்தது. பெண்ணின் கண்களில் அழகும் அறிவும்



களை வீசின. பெண் 'இண்டர்' வரை படித்திருந்தாள். பிறருடன் அவள் பழகும் முறையில் ஒரு கவர்ச்சி — புதுமை காணப்பட்டது. கல்யாணத்தில் அவளைச் சுற்றிப் பத்துப்பேர் அவளையே காட்சிப் பொருளாகக் கண்டு கொண்டிருந்தனர். இதை யெல்லாம் காணக் காண சந்துருவின் மனத்தை வேதனை அலட்டத் தொடங்கியது.

கல்யாணத்தன்றே வாசுவும் ஜானகியும் சகஜமாகப் பேசிக் கொண்டனர். சந்துருவுக்கு அது எல்லையற்ற வியப்பை அளித்தது. எதைக் கண்டு ஜானகி வாசுவிடம் இப்படி மோகித்து விட்டாள் என்பது அவனுக்கு விளங்காத புதிராக இருந்தது. வாசுவின் அறிவுத் திறனைக் கண்டு மட்டும் அவனுக்கு ஒரு பெண் தன் மனத்தைப் பறி கொடுப்பாள் என்று அவனால் நம்ப முடியவில்லை.

ஜானகி புக்ககம் வந்தவள் வெகு எளிதில் எல்லோருடைய மனத்திலும் ஒரு அழியாத இடம் பெற்று விட்டாள். அதுவரையிலும் வாசுவை மதிக்காமலிருந்த வீட்டாரைக்கூட அவள் மசிய வைத்து விட்டாள். வாசுவின் அருமையை உணரத் தலைப்பட்ட வீட்டாரின் நடத்தையைக்

"பிறக்கப்போகும் குழந்தை வாசுவைக் கொண்டு பிறந்து விட்டால் எப்படியிருக்கும்! அப்பொழுது என் குழந்தையைத் தான் எல்லோரும் கொஞ்சுவார்கள். ஆனால் ஜானகியைப் போலவே பெண்ணாக பிறந்தால்......! பெண்களே பிறக்காத என் குடும்பத்தில் அந்தக் குழந்தைக்கு நிச்சயம் நல்ல வரவேற்பு கிடைக்கும். அப்பொழுது என் குழந்தையை யாரும் சீந்த மாட்டார்கள். அப்படியும் ஆகிவிடுமோ! அப்படியாகிவிட்டால்...! ஐயோ! அப்படியாகி விடக்கூடாதே! என் குழந்தையைவிட அது ஒரு விஷயத்திலும் மேம்பட்டு இருக்கக் கூடாது. இருக்க முடியாது. இருக்காது!" என்று இப்படியாகத் தன் கைக்குள் அடங்கிய விஷயம் போலச் சந்துரு தன் எண்ணங்களை ஓடவிட்டான்.

விதி, வேறு விதமாக முடிந்து வைத்திருந்ததை அவிழ்த்து விட்டது. பாலுவுக்கு ஏதோ ஜுரம் கண்டது. ஒரு வார காலம் படுக்கையில் கிடத்தப் பட்டான். ஆகாரம் செல்லவில்லை. அப்படி இப்படி அசையக்கூட இல்லை. போட்டபடியே கிடந்தான். 'இளம் பிள்ளை வாதம், முடக்கு வாதம், நரம்பு நோய்' இப்படி என்னென்னவோ பெயர் வைத்தார்கள். வைத்தியம், மருந்து, மாந்திரீகம் இவை யாவும் குறைவின்றிப் பார்த்தாகிவிட்டது. பாலு ஜுரத்திலிருந்து தேறினான். ஆனால் பழைய பாலுவாக இல்லை. கால்களும் கைகளும் சுவாதீனமற்றுப் போன நிலையில் வெளி வந்தான். உயிர் பிழைத்ததே புனர் ஜென்மம் என்றும், கைகால்கள் பிற்காலத்தில் தானாக சுவாதீனத்திற்கு வந்தாலல்லாது சிகிச்சையாலாகாது என்றும் டாக்டர்கள் கையை விரித்து விட்டனர். எதன் பிறப்பில் உள்ளப் புயல்களையும் மறந்து ஆறுதல் கண்டு விடலாமென்று நினைத்தானே, ஒரு சிறிதளவு கண்டு கொண்டிருந்தானே, அதற்கும் இடைவெட்டு விழுந்தபொழுது, அந்த மகத்தான துக்கம் சந்துருவின் மனத்தை ஆறக் குழிப் புண் ஒன்றைப் புழுக் குடைவதுபோலக் குடைந்து விட்டது. கண் கொடுத்துக் கண் பறித்ததைக் கடவுளின் மோசடி என்று அலறி அரற்றினான்.

சேகர் வளர்ந்தான். எல்லோருடைய அணைப்புக்கும் அன்புக்கும் பாத்திரமானான். கன்னம் சிவக்கச் சிவக்க அவனைக் கண்டவரெல்லாம் முத்தமிட்டனர். சேகருக்கு அன்பைக் கொள்ளை கொள்ளையாகக் கொட்டிக் கொடுத்தவர்களால் பாலுவைப் பார்த்து அனுதாபப் படத்தான் முடிந்தது.

ஒரு முறை குடும்பத்தில் யாவரும் பழனிக்குச் சென்றனர். பாலு, சேகர் இருவருக்கும் முடியிறக்கி, வேண்டுதலையை நிறைவேற்றி விட்டுத் திரும்பி வரும்பொழுது ரயிலிலிருந்த அத்தனை பிரயாணிகளிடமும் தாவித் தாவி விளையாடினான் சேகர். பலர் அவனுக்குப் பழமும் பிஸ்கோத்தும் பொம்மையும் வாங்கிக் கொடுத்தனர். இதைப் பார்க்கப் பார்க்கச் சந்துருவுக்கு ஆங்காரம் வளர்ந்தது. வாசு தன் கைகளை நீட்டிப் பாலுவைக் கேட்டான். தன்னைக் குத்திக் காட்டவே, அவன் அவ்விதம் கேட்பதாக எண்ணிக் கொண்ட சந்துருவுக்குத் தன் குழந்தையை அவனிடம் கொடுக்க மனம் வரவில்லை. ஏதோ சாக்குச் சொல்லிப் பாலுவைத் தன் மடியிலேயே வைத்துக் கொண்டான்.

வாசுவின் குழந்தையைப் பார்த்துப் போக அவன் நண்பர்கள் தங்கள் மனைவிகளுடன் வந்தனர். அவர்களில் ஒருத்தி ஜானகியைத் தனியே அழைத்து, பாலுவுக்கருகில் சேகரும் வளர்ந்து வந்தால் கெட்ட கண் பட்டுவிடு மென்றும், உடனே தனியாக வேறு ஜாகைக்குப் போய் விடுவது நல்லது என்றும் கூறியதைச் சாரதா கேட்டு விட்டாள். சந்துருவுக்குச் செய்தி எட்டியதும் அவன் மனத்தில் பொறாமை ஆல விருக்ஷமாக வேரூன்றியது. ஆசைக் கென்றில்லா விட்டாலும் பிறருக்காக, சம்பிரதாயத்திற்காகக் கூட அவன் சேகரை எடுத்துக் கொஞ்சியதில்லை. சாரதாவையும் தடுத்து விட்டான். சேகருக்கு ஏதாவது வாங்கி வரும்பொழுது பாலுவுக்கும் அதே போன்ற பொருள் வாங்கி வர வாசு தவறமாட்டான். தின்பண்டங்களை அவன் உடம்புக்கு ஆகாதென்றும், விளையாட்டுப் பொருள்களை வைத்து விளையாட அவன் பிறக்கவில்லை யென்றும் காரணம் கூறி அவற்றைப் பாலுவுக்கு வாங்கிக் கொள்ள மாட்டான். சந்துரு. இப்படி எதையும் குற்றமாக எடுத்துக் கொள்வதை யறிந்த வாசுவும் அந்த வழக்கத்தை நிறுத்தி விட்டான்.

இப்படியாக ஒரே குடும்பமா யிருந்தும் முடுக்கிவிட்ட யந்திரம் போல, சகோதரர்களின் தாம்பத்திய வாழ்க்கை தனித் தனியே, முரண்பட்ட வழிகளில் இயங்கிக் கொண்டிருந்தது.

* * *

சென்று போன நிகழ்ச்சிகளைச் சுற்றிச் சுற்றி வந்ததில் சந்துருவின் சித்தவண்டு களைத்துப் போய்க் கீழே சற்றுமுன் கண்ட கிலுகிலுப்பைச் சம்பவத்தில் மறுபடியும் வந்து கலந்தது.

சேகருக்கும் பாலுவுக்கும் வாழ்வெனும் நெடும் பாதையில் காத்திருக்கும் எதிர் காலத்தைப் பற்றித் தீவிரமாக அவன் மனத்திலே சிந்தனை எழுந்தது.

சேகர் பெரியவன் ஆகும்பொழுது வாசுவைப் போலவே அரும்பெரும் செயல்களைச் சாதித்து விடுவான். தன் பிள்ளை பாலுவோ கடைசி வரையில் தனக்குச் சுமையாக, மனத்தை உறுத்தும்படியாக இருந்து வரப் போகிறான். வாழ்வின் இன்பங்களைத் தன்னால்தான் உள்ளபடி உணர முடியவில்லையே யென்றால் அது பரம்பரையாகத் தொடரவும் வேண்டுமா!

கொந்தளித்துக் குமுறி எழுந்து மோதும் எண்ணச் சுழல்கள், வெளியிடங்களுக்குச் சென்று சுற்றி வந்தால் அல்லாது ஓயாது என்று தோன்றவே சந்துரு மறுபடியும் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தான்.

பாலு நாலு புறமும் குறிப்பின்றிப் பரக்கப் பரக்கப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். அப்பாவைப் பார்த்ததும், "அப்பா! பப்புட்டு!" என்று பிரயாசைப்பட்டு வார்த்தைகளைக் கூட்டிச் சொன்னான். ஹீனமான குரலில் வெளிவந்த அவன் பேச்சு சந்துருவுக்கு நாராசம் போலிருந்தது.

"ஆமாம்! நீயே போய்க் கடையிலே வாங்க வேண்டிய வயசு. நான் வாங்கித் தரேன், வா!" என்று அலுத்தாற் போல் கூறிவிட்டு வீட்டை விட்டு வெளியேறி நடந்தான். வாசற் திண்ணையில் சேகரைப் பார்த்தான். கையில் கிலுகிலுப்பையை வைத்து ஆட்டியபடி தனக்கே புரியாத மழலையில் ஏதேதோ வார்த்தை ஜாலம் செய்து கொண்டிருந்தான் சேகர்.

சந்துருவைப் பார்த்ததும் திண்ணையில் ஒரு கோடியிலிருந்து ஆவலோடு தவழ்ந்து வந்து அவன் மேல் தாவ முயற்சித்தான். சந்துரு அவன் மீது வெறுப்பான ஒரு பார்வையை விட்டெறிந்து விட்டுக் கடைத்தெருப்பக்கம் சென்றான்.

மனத்தில் வெறுப்பு குமிழியிட்டுப் பொங்கிப் பெருக, கையில் 'பப்பர் மெண்ட்' பொட்டலத்துடன் திரும்பி வந்தான் சந்துரு. தெருவில் ஜன நடமாட்டமே இல்லை. சந்து முனை திரும்பியதும் முதலில் அமைந்திருந்த தன் வீட்டைத்தான் பார்த்தான். கண்ணுக்கெதிராக நிகழ்ந்த அந்தப் பயங்கர நிகழ்ச்சியைக் காண அவனுக்குக் குலைநடுக்கம் ஏற்பட்டது. கைகால்கள் பதறின. உடம்பு 'வெட வெட' வென்று நடுங்கி, கால்கள் தரையில் பாவாது தள்ளாடின. செய்வதறியாத குழப்பமும் பீதியும் மனத்தைக் கவ்வின. அடுத்த அரைக் கணத்திலே ராட்சஸ குணம் அவனை



அடிமை கொண்டு விட்டது. சுற்று முற்றும் பார்த்தான். அவன் அந்தப் பக்கம் வந்ததை ஒருவரும் கண்டு கொள்ளவில்லை என்று ஊர்ஜிதமானவுடன் திரும்பி வந்தவழியே 'விரு விரு' வென்று நடந்துவிட்டான். கொலை செய்தவனைப் போல ஓடினான்! திசை தெரியாது சென்ற மனத்தில் துவேஷமும் குரோதமும் வெறியாடின.

"போகட்டும்! சாகட்டும்! தொலையட்டும்! அப்பொழுதுதான் என் மனசு ஆறும்."

"இல்லை; வேண்டாம், போ! ஓடு! நீ நினைத்திருந்தால் அவனைக் காப்பாற்றி யிருக்க முடியாதா! உனக்கு வாழத் தெரியவில்லை யென்றால் அந்தக் குற்றமற்ற குழந்தை என்ன பாவம் செய்தது! உன் செய்கை தெய்வ சம்மதமாகாது. ஓடிச்சென்று காப்பாற்று. உயிரைப் பறிக்காதே!"

"முடியாது! அவனும் அவளும் அழவேண்டும். அதை நான் பார்க்கவேண்டும். தொடர்ந்து நான் துக்கம் அனுபவிக்கவும், அவன் இன்பம் ஆளவுமா! அழகற்ற அவன் படிப்பு, மனைவி, உத்தியோகம், குழந்தை எல்லாவற்றிலும் என்னைவிட உயர்ந்து வாழ்வதை எப்படிச் சகிப்பேன்!"

"சண்டாளா! உயிருக்காக உயிரைக் கொடுத்த நாட்டிலே நீ தப்பிப் பிறந்தவன்! உன் கெட்ட எண்ணங்களுக்கே இத்தனை யனுபவித்து விட்டாய். இந்தத் துரோகத்திற்கு இன்னும் என்னென்ன நேரப் போகிறதோ! சேகர் போய் விட்டால் பாலுவுக்குக் குணமாகி விடுமா! உன் வினை உன்னைச் சுட்டுவிடும். பிறர் வாழ்வில் கொளுத்தும் நெருப்பு உன் வாழ்வையே சாம்பலாக்கி விடும். மண்டை போகுமளவும் மாளாது. உன்னை உயிரை வைத்துச் சித்திரவதை செய்து விடும். ஓடு! போ! சேகரைக் காப்பாற்று!"

மனச்சாட்சியின் சம்மட்டியடிகளில் மிருக வெறிக்குணம் அடங்கவே வீட்டை நோக்கி ஓடிவந்தான் சந்துரு. எதிரில் வந்த எவரையும் பாராமல் இடித்துத் தள்ளிக்கொண்டு ஓடிவந்தான். வீடு நெருங்கவும் நடையைத் தேக்கியது குற்றம் புரிந்த மனம். வீட்டை அடைந்தான். ஆனால் அவன் கண்டது என்ன! வீட்டு வாசலில் ஏகக் கூட்டம். உள்ளேயிருந்து அலறும் அழு குரல்கள் கேட்டன. கூட்டத்தை விலக்கிக் கொண்டு புகுந்தான். உயிரற்ற சேகரின் உடலைத் தரையிலே கிடத்தி யிருந்தார்கள். திறந்திருந்த சாக்கடைத் தொட்டியில் கிலு கிலுப்பை மிதந்து கொண்டிருந்தது! சோதனை போல வாசுவும் அன்று ஊரிலில்லை. மாலைதான் வருவதாக இருந்தான். சந்துருவுக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலாகி விட்டது. 'தான் பார்த்தும் காப்பாற்ற முயற்சி செய்யாமல் பேய்க்குணத்துடன் ஓடியதை யாராவது கண்டதாகக் கூறிவிட்டால்......!' பயமும் கலவரமும் அவன் உடலை ஆட்டி வைத்தன. அப்படியே பூமி வெடித்துத் தன்னையும் விழுங்கிவிடக்கூடாதா என்று அங்கலாய்த்தான். முன்னமேயே ஏக்கங்களில் எல்லையைக் கண்டு விட்டதால் அவன் அழக்கூடத் திராணியற்றுப் போனான். மனத்தை வாள் கொண்டு துண்டாடுவது போலிருந்தது.

"ரத்த பாசத்தையும் அழித்து விட்டல்லவா பொறாமை வெற்றிகொண்டு விட்டது! வாசுவிற்கு நடந்தவைகளைக் கண்டு நான் ஏன் பொறாமைப் பட்டிருக்க வேண்டும்! பெருமை யடைந்திருக்கக் கூடாதா! அந்தப் பண்பு எனக்கு ஏன் இல்லாமற் போயிற்று! நான் கொலைகாரன். இரக்கமற்றவன். கொடுமைக்காரன். ஐயோ! மறக்கக்கூடியதா இது! இனி ஒவ்வொரு நிமிடமும், ஒவ்வொரு நிகழ்ச்சியின் பொழுதும் மனம் அதைக் குத்திக் காட்டுமே!"

வீட்டின் சோக ஒலி அவன் நெஞ்சைப் பிளந்தது. நிலைமையை ஓரளவு புரிந்து கொண்ட பாலுகூடத் தேம்பித் தேம்பியழுவதைப் பார்த்தான். அந்தக் குழந்தைக்குள்ள பரிவுகூடத் தனக்கில்லாது போயிற்றே என்ற ஆற்றாமையினால் மனம் புழுங்கித் தவிதவித்துப் போனான்.

* * *

மாலை நான்கு மணிக்கு வாசு வந்து சேர்ந்தான். சந்துருவுக்கு அவனைப் பார்க்க முகம் ஏது! தன் குற்றத்தை ஒப்புக்கொள்ள எவ்வளவுக்கெவ்வளவு மனம் துடித்ததோ, அவ்வளவுக்கவ்வளவு அதை எப்படியாவது மறைத்துவிட வேண்டும் என்ற எண்ணமும் வலுத்தது. 'தீமை புரிந்துவிட்ட மனச்சாட்சி அவனை வாசுவிடம் கெட்டித் தள்ளிற்று. ஓடோடியும் சென்றான் சந்துரு. சந்துருவைப் பார்த்த பின்னும் வாசு வாய்விட்டு அழவில்லை. சூழ்நிலையில் கண்கள் மட்டும் கலங்கி நீர் கட்டியிருந்தன. சந்துருவாக வலியச் சென்று அவனைக் கட்டிக்கொண்டு ஏதேதோ கூறத் தொடங்கினான். அவனுக்கு வார்த்தைகள் கோவையாக வரவில்லை. 'ஹோ' என்று அழுகைதான் வந்தது.

"ஏன் அண்ணா அழுகிறாய்! இப்படி நேரும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை; நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்! இதற்காக அழுதால் திரும்பி வரப்போகிறானா! இப்பொழுது எனக்குத் தான் என்ன அப்படி வயசாகி விட்டது! ஜானகிக்குத்தான் தாளாது. அதோ, நம் குழந்தை பாலு இருக்கிறானே!" என்று சந்துருவைத் தேற்றத் தொடங்கி விட்டான்.

வாசுவின் வார்த்தைகளைக் கேட்ட சந்துரு அப்படியே ஸ்தம்பித்துப் போய் விட்டான்.

உருவத்தில் அழகு பெற்றிருந்தேனே தவிர உள்ளத்தின் அழகு வாசுவிற்கல்லவா அமைந்து விட்டது! புற அழகு, காலம் கிழித்த கரிக்கோடுகளால் இதோ, அலட்சணமாகி விட்டது. வாசுவின் அக அழகோ, சுடச்சுட ஒளிதரும் பொன்னைப்போன்று ஒவ்வொரு நிகழ்ச்சிக்குப் பின்னும் மெருகிடப் பட்டல்லவா விளங்குகிறது!

'தங்கப் பதுமை போன்ற தம்பியின் குழந்தையைத் தன் குழந்தையாக பாவித்துக் கொள்ள அவனுக்கு மனம் வந்ததில்லை. சோர்வாய்ச் சும்பிப்போய் உட்கார்ந்திருக்கும் பாலுவை நம் குழந்தை என்று ஒரே வார்த்தையில் சொல்லத் துணிந்தது வெறும் பாசாங்கிற்கா! அதுவும், அந்த நிலையில்......! அமுதம்போன்ற தன் கண்மணியை இழந்து நிற்கும் தருணத்தில் இந்த வார்த்தைகளை வெளியிட எத்தனை உறுதி, மன பரிபக்குவம் வேண்டும்! உண்மையில் வாசு வறட்டு வேதாந்தியா! அல்லது பற்றற்ற ஞான மார்க்கம் கற்றுத் தெளிந்தவனா! இல்லை, வாசு தான் மனிதன்! அந்தச் சொல்லும் பொருளும் உணர்த்த முயலும் முழு மனிதன் என்று தெளிந்து தேர்ந்தநிலையில், வாசுவையே தனக்கு ஞானாசிரியனாக - வழிபடும் தெய்வமாக மனத்தில் சிலாசாஸனம் போலப் பதித்துக் கொண்டான்.

மனக் கண்களில் ஒளிவெட்டிய சித்திரங்கள் மெல்ல மெல்ல மங்கவும், சந்துருவின் அகமும் புறமும் நிகழும் காட்சியில் வந்து ஒட்டின.

நிறுத்தி வைத்த கம்பம்போல் வாசு அசையாமல் நின்று கொண்டிருந்தான். இவ்வளவிற்கும் காரணமான கிலு கிலுப்பை சாக்கடைத் தொட்டியில் மிதந்து கொண்டிருந்தது.



# அருவிக்கரை

ஆசிரியர் : சுதர்சன்

மொழிபெயர்ப்பு : ரா.வி.

## 1. "நான் ஒரு இந்தியன்!"

மாலை நேரம். நான் கப்பலின் மேல் தளத்தில் உட்கார்ந்து, மேல் திசையிலே மறையும் மாலைக் கதிரவன் அந்தி வானத்திலே அற்புதமாக அள்ளிச் சொரிந்து சிருஷ்டித்துக் கொண்டிருந்த வர்ண விசித்திர ஜாலக் காட்சிகளைக் கண்டு ரசித்துக் கொண்டிருந்தேன். அதே சமயம் யாரோ என் பின்னால் வந்து என் தோளில் கையை வைத்து அன்பு ததும்பும் இனிய குரலில், "மன்னிக்க வேணும், உங்கள் தனிமையைக் கலைக்க நேர்ந்ததற்காக!", என்றார்.

நான் பின்னால் திரும்பிப் பார்த்தேன். முகத்தில் இளநகை தாண்டவமாட அவன் தான் நின்று கொண்டிருந்தான். என் உள்ளத்தில் இனம் தெரியாத ஒரு இன்பத் துடிப்பு எழுந்தது. அவன் என்னுடன் மார்ஸெயில்ஸிலேயே கப்பலேறி விட்டான். அவனுடைய உருவம், அழகிய தோற்றம், சுபாவம்-இவை கப்பலிலிருந்த அத்தனை பிரயாணிகளின் உள்ளத்திலும் ஒருவித வியப்பை உண்டாக்கியிருந்தன. 'எப்படியாவது அவனுடன் நாம் அறிமுகம் செய்து கொள்ள மாட்டோமா?' என்ற ஆசை எல்லாருடைய உள்ளத்தையுமே ஆட்கொண்டிருந்தது. ஆனால் அவன் நாள் முழுவதும் தனித்தே இருந்து வந்தான். அவனுடைய களையான முகத் தோற்றமும் விசித்திரப் போக்கும் வசீகரண மந்திரத்தைப் போல என் உள்ளத்தை ஆகர்ஷித்து விட்டன. என்னையறியாமலே என் உள்ளம் அவனுடைய அன்புத் தளையில் கட்டுண்டது. 'எப்படியாவது இவனிடம் அறிமுகம் செய்து கொள்ள முடிந்து விட்டால், நாள் முழுவதும் இவனுடனேயே உட்கார்ந்திருக்கலாமே!' என்று எண்ணுவேன். விநாடிக்கு விநாடி நிமிஷத்துக்கு நிமிஷம் என் உள்ளத்தில் அந்த ஆசை வலுப் பெற்றுக் கொண்டே வந்தது. இங்கிலாந்திலேயே வசித்து வந்ததனால் உள்ளத்தில் மேல் நாட்டு நாகரிகம் குடிகொண்டிருக்க வேண்டும். இல்லா விட்டால் இந்த மேல் பூச்சு நாகரிகம் இந்தியர்களிடம் ஏது? இந்தியர்கள் வெளி வேஷத்தை விரும்புகிறவர்களோ அல்லது அதற்குக் கட்டுப்பட்டு நடக்கிறவர்களோ இல்லையே! ஆனால் ஏன் அவன் எப்பொழுதும் ஏகாந்தத்தையே நாடுபவனாகவும் சொற்களை அளந்து உபயோகிக்கிறவனாகவும் இருந்தான்? யாரையும் அவன் பார்ப்பதும் இல்லை; யாருடனும் அவன் பேசுவதும் இல்லை. தான் உண்டு, தன் காரியம் உண்டு என்று இருந்தான்.

கப்பலில் உள்ள மற்றப் பிரயாணிகள் ஒருவருக்கொருவர் நண்பர்களாகி விட்டார்கள். ஆனால் அவன் மட்டும் எப்பொழுதும் தன் அறையே கதியாக இருந்தான்; அதிலேயே அடைந்து கிடந்தான். அவனோ ஆங்கிலேயன். ஆனால் அவனுடைய உடைகளோ இந்தியர்களைப் போலிருந்தன. அவன் இந்திய உடையில் தெய்வீகக் களை பொருந்தியவனாகக் காட்சி அளித்தான். அதே போன்று ஆயிரக் கணக்கான, லட்சக்கணக்கான மக்கள் உடையணிந்து கொண்டு நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அந்த ஆங்கிலேயனுக்கு அந்த உடை உடலோடு ஒட்டி அமைந்திருந்தது போல, வேறு யாருக்கும் உடலோடு ஒட்டி எடுப்பாக அமைந்து நான் இதுவரை பார்த்ததே இல்லை .நானோ நவ நாகரிகத்தில் அதிகப் பற்றுதல் கொண்டவன். ஆனால்




அப்படிப்பட்ட என்னுடைய உள்ளமே அந்த ஆங்கிலேயனின் எளிமையைக் கண்டு அயர்ந்து விட்டதென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! அவனைப் பார்த்தபின்தான் எனக்கே நம் நாட்டு நாகரிகத்தின் மீது பற்றும் அபிமானமும் ஏற்பட்டன. நம் நாட்டு நாகரிகத்தின் பெருமையை எண்ணி எண்ணி நான் பூரித்தேன். அடிக்கடி என் கூட்டுப் பிரயாணிகளைப் பார்த்து, "பார்த்தீர்களா? அவனுக்கு நம் நாட்டு பொருள்கள் தான் பிடித்திருக்கின்றன!" என்று சொல்லி மகிழ்வேன். ஆனால் அவனுக்கு நம் நாட்டுப் பொருள்களின்மீது அவ்வளவு பற்றுதல் ஏற்படக் காரணம்? அந்த ரகசியம்தான் யாருக்குமே விளங்கவில்லை. அவனுடன் பேசிப் பழக வேண்டுமென்ற கட்டுக் கடங்காத அவா என்னை உந்தித் தள்ளியது. ஆனால் ஒவ்வொரு தடவையும் அந்தப் பாழாய்ப் போன நவ நாகரிகம் என் குரல் வளையைப் பிடித்துப் பேச வொட்டாமல் அடித்து விட்டது. ஆகவே, அப்பொழுதெல்லாம் அந்த நாகரிகத்தின் மேல் எனக்கு எரிச்சல் எரிச்சலாகப் பற்றிக்கொண்டு வந்தது.

அவனை என்னெதிரே கண்டதும், என் மனம் மலர்ந்தது; அகம் மகிழ்ந்தது. "இல்லை, ஸார்! இந்தத் தனிமை என்னையே தேள் போலக் கொட்டிக் கொண்டிருந்தது. நல்ல வேளையாகத் தாங்கள் கைகொடுத்துக் காப்பாற்ற வந்தீர்கள். தங்களுக்கு என் நன்றி!" என்றேன் இலேசாகச் சிரித்தவாறே.

அவனும் சிரித்து, "நீங்கள் எவ்வளவு நல்லவர்! உங்களைப் பார்த்துப் பேசிப் பழக வேண்டும் என்று எனக்கு எவ்வளவு கொள்ளை ஆசை, தெரியுமா?" என்றான்.

"தாங்கள் என் அறைக்கு வருகிறீர்களா?" என்று நான் அவனைக் கேட்டேன்.

"ஓ! தாராளமாக!" என்று முகத்தில் மகிழ்ச்சி பொங்கப் பதில் அளித்தான் அவன்.

நானும் அவனும் என் அறைக்குச் சென்று உட்கார்ந்து பேசலானோம். நான் கனவிலும் காணாத, சற்றும் எதிர்பாராத அந்த ரகசியம் அப்பொழுதுதான் வெளியாயிற்று.

"நீங்கள் எந்த ஊருக்குப் போகிறீர்களோ?" என்று நான் அவனைக் கேட்டேன்.

"நானா? மூல்தானுக்கு!" என்றான் அவன்.

"நீங்கள் அங்கே ஏதாவது உத்தியோகத்தில் இருக்கிறீர்களோ? எந்த இலாக்காவில்?" என்று நான் விசாரித்தேன்.

"இல்லை, நான் அங்கே உத்தியோகத்தில் இல்லை. என் வீடே அங்குதான் இருக்கிறது!" என்றான் அவன்.

"உங்கள் வீடா?"

"ஆமாம், என் வீடுதான். ஏன், உங்களுக்கு நான் சொல்வது வியப்பை அளிக்கிறதோ?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம். நிஜமாக வியப்பாகத் தான் இருக்கிறது. ஏனென்றால் இந்தியாவுக்கு முதல் தடவையாக நீங்கள் போகிறீர்களாக்கும் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தேன்!" என்றேன்.

"நீங்கள் எண்ணியதில் தவறு ஒன்றும் இல்லை; சரிதான். இதற்கு முன்பு நான் இந்திய மண்ணில் காலடி எடுத்து வைத்ததேயில்லை!" என்றான் அவன்.

"என்ன?"

கார்முகில்கள் சூழ்ந்து விட்டால் இரவின் இருள் இன்னும் அதிகமாகி விடுகிறதல்லவா? அதுபோல் என் வியப்பு இன்னும் பன்மடங்கு அதிகமாகியது. அப்பொழுது என் முகம் வேறு அதற்குச் சரியான எடுத்துக் காட்டாக விளங்கியது.

அவன் சிரித்துவிட்டு, "அப்படியானால் என்னை நீங்கள் ஆங்கிலேயன் என்று எண்ணுகிறீர்களா?" என்று கேட்டான்.

"தங்களை வேறு விதமாக எண்ணுவதற்கு வேறு எதுவும் முகாந்தரம் இருப்பதாகத் தோன்றவில்லையே!" என்றேன் நான்.

"அப்படி நீங்கள் நினைப்பதுதான் தவறு!"

"அப்படியானால் நீங்கள்......"

"நான் ஒரு இந்தியன்தான்!"

நடக்கக்கூடாத காரியம் நடந்து விட்டது போல், நிகழக்கூடாத நிகழ்ச்சி நிகழ்ந்து கேள்விப்பட்டது போல் நான் உட்கார்ந்த இடத்திலேயே ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்தேன். பிறகு எனக்கு ஏற்பட்டிருந்த அந்த வியப்புச் சிறிதும் தணியாதவனாய், "நான் பல ஊர்த்தண்ணீர் குடித்திருக்கிறேன். இது வரை என் கண்கள் என்னை ஏமாற்றியதில்லை. இவ்விஷயத்தில் இதுவரை எனக்கு என்மேல் பூரண நம்பிக்கை இருந்தது. குறைந்த பட்சம் ஆளைப் பார்த்து ஊரைச் சொல்லும் விஷயத்தில் நான் ஏமாறவே மாட்டேன் என்று எண்ணி இறுமாந்திருந்தேன். ஐரோப்பாவில் உள்ள தனித் தனி மாகாணத்தவர்களைக் கண்டு பிடிப்பதில்கூட நான் இதுவரை சிறிதும் தவறினதில்லை. ஆனால் இப்படி ஒரு இந்தியனையே கண்டுபிடிக்க முடியாமல் திண்டாடும் நிலைமை ஏற்பட்டது இதுதான் முதல் தடவை. இம்மாதிரி என்றைக்காவது ஒருநாள் நடக்கக் கூடும் என்று நான் கனவில் கூட நினைத்ததில்லை!" என்றேன். வெட்கத்தினால் என் முகம் சிவந்தது. தலையைக் குனிந்து கொண்டு விட்டேன்.

ஆனால் அடுத்த கணமே தலையை நிமிர்த்தி, "ஆனால் நீங்கள் இந்தியாவுக்குப் போவது இதுதான் முதல் தடவை என்று சொன்னீர்களே!" என்று கேட்டேன்.

"ஆமாம், இது முதல் தடவைதான்!" என்று அவன் சாந்தமாகப் பதில் அளித்தான்.

"ஆமாம். உங்களுக்கு இந்திய மொழி ஏதாவது தெரியுமோ?"

"தெரியாது!"

அதற்குமேல் பேச எனக்கு நா எழும்பவில்லை. ஆனால் என் கண்களில் மட்டும் வியப்பு இன்னும் பன் மடங்கு அதிகமாகிவிட்டது. ஆகவே; நான் சிறிது நேரத்துக்குப் பிறகு, "ஆமாம். நீங்கள் இந்தியர்; ஆனால் உங்கள் நிறம் ஆங்கிலேயர்களைப் போல் அவ்வளவு சிவப்பாகவும் வெளுப்பாகவும் இருக்கிறது. நீங்கள் இந்தியர்; ஆனால் நீங்கள் இந்தியாவைப் பார்த்ததில்லை. நீங்கள் இந்தியர்; ஆனால் உங்களுக்கு ஒரு இந்திய மொழியும் தெரியாது. இப்படியிருக்கும்பொழுது நான் உங்களைப் பற்றி என்னவென்று எண்ணுவது?" என்றேன்.

ஆங்கிலேயன் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டுவிட்டு, "இப்பொழுது ஒன்றும் கேட்காதீர்கள். இன்னொரு சமயம் சாவகாசமாக என் கதையைச் சொல்லுகிறேன்!" என்றான்.

"இல்லை, இல்லை! இப்பொழுதே சொல்லுங்கள். கேட்டால்தான் என் மனம் நிம்மதி அடையும். உங்கள் கதையைக் கேட்டு முடிக்காத வரையில் எனக்குத் தூக்கம் பிடிக்காது!" என்றேன்.

அவன் மௌனம் சாதித்தான். முன்பின் அறிமுகம் இல்லாத ஒருவனிடம் இவ்வளவு சீக்கிரமாக நம் கதையைச் சொல்லுவது உசிதமா, இல்லையா என்று அவன் யோசித்தானோ, என்னவோ? அவனுடைய முக பாவம் அவன் அம்மாதிரி சிந்தனையில்தான் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியது. அவன் வெகு நேரம் பேசாமலே உட்கார்ந்திருந்தான். அவன் உள்ளத்தில் அப்பொழுது ஒரு பெரும் போர் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பதையும் அடிக்கடி மாறுபட்டுக் கொண்டிருந்த அவனுடைய முக பாவம் உணர்த்தியது. அவன் மன்னிப்புக் கோரினான். "இன்னொரு சமயம் சொல்லுகிறேன். இப்பொழுது என்னை விட்டு விடுங்கள்" என்று மன்றாடினான்.

ஆனால் நான் விடுவதாயில்லை. என்னுடைய இந்தியப் பிடிவாதமும் ஆக்கிரஹமும் அவனை மேற்கொண்டு பேச விடாமல் தடுத்து விட்டன. ஆகவே, அவன் வேறு வழியின்றி, "என் கதையை முதன் முதலாக உங்களிடம் தான் சொல்லுகிறேன். இதுவரை யாரிடமும் சொன்னதில்லை. எத்தனையோ பேருக்கு 'அப்புறம் சொல்லுகிறேன், அப்புறம்



சொல்லுகிறேன்!' என்று காலங் தாழ்த்தி வந்திருக்கிறேன். அப்புறம் ஆர்வம் குன்றிப் போனதால் அவர்கள் என்னிடம் கதை கேட்க முன் வந்ததில்லை. ஆனால் உங்கள் பிடிவாதத்துக் கெதிரே 'மாட்டேன், முடியாது!' என்று சொல்ல என் மனம் முன் வர மாட்டேன் என்கிறது. நீங்கள் இந்தியப் பத்திரிகைகளுக்குக் கதை எழுதுவது உண்டு என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஒருவேளை என் வாழ்க்கை உங்களுக்கு மனோரஞ்சகமாகத் தோன்றக் கூடும். அப்படியிருந்தால் உங்களுக்கு ஒரு கதைக்கு விஷயம் ஆயிற்று அல்லவா? ஆகவே என் வாழ்க்கைக் கதையைத் தங்களிடம் சொல்லுகிறேன்!" என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்தான்.

நான் கவனமாக அவன் கதையைக் காது கொடுத்துக் கேட்க நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

★

சகோதரா! எனது பூர்வீகம் முல்தான் தான். ஏனெனில் என் தாத்தா முல்தானில் தான் வசித்து வந்தார். அங்கே இப்பொழுது கூட ஜனங்கள் அவர் பெயரைக் கேட்டாலே தெய்வமாகப் பூஜித்து வருகிறார்கள். அவர் பணக்காரரா யிருந்தார் என்பதற்காக மட்டும் அல்ல; அவர் நன்னடத்தைக்கும் நாணயத்துக்கும் பெயர் போனவராகத் தலைசிறந்து விளங்கினார் என்பதற்காகத்தான். இந்தக் காரணங்களால் என் தாத்தாவுக்கு முல்தான் முழுவதிலும் நல்ல செல்வாக்கு இருந்து வந்தது. அவர் வீதி வழியே எங்கேயாவது சென்றால் போதும், ஜனங்கள் அவரைத் தரிசிப்பதற்காக ஏகக் கூட்டமாகக் கூடி விடுவார்கள். அவர் எந்த வழக்குக்காவது தீர்ப்புச் சொன்னால் சொன்னதுதான். அதை மீற யாருக்குமே துணிவு ஏற்படாது. எந்த விஷயத்திலும் அவர் கீறிய கோட்டுக்கு யாரும் வேறு சொல்ல மாட்டார்கள். எங்கள் சமூகத்தினரிடையே அவருக்கெதிரே தலை நிமிர்ந்து வார்த்தையாடும் துணிவு இதுவரை யாருக்குமே உண்டானதில்லையாம். அவர் இறந்த அன்றைக்கு நகரம் முழுவதும் கடையடைப்புச் செய்து ஹர்த்தால் அநுஷ்டித்தார்களாம். பிரபலமான செய்தித் தாள்கள் அவருடைய மரணத்தைக் குறித்து வருத்தம் தெரிவித்து நினைவு மலர்கள் வெளியிட்டன என்றும் சொல்லிக் கேள்விப் பட்டிருக்கிறேன். அப்பொழுது என் தகப்பனார் இங்கிலாந்தில் இருந்தார். தம் தகப்பனாரின் மரணச் செய்தி கேட்டு அவர் மிகவும் மனம் உடைந்து போய் விட்டார். வெகு நாட்கள் வரை அவர் வீட்டை விட்டு வெளியே தலைகாட்டவே இல்லை. எப்பொழுது பார்த்தாலும் தம் தந்தையை நினைத்து அழுதவண்ணமாகவே இருந்தாராம். அவர் இங்கிலாந்துக்குத் தொழிற் கல்வி கற்பதற்காகப் போயிருந்தாராம்.

என் தாத்தா இறந்துவிடவே, என் தாயார் என் தகப்பனாரை உடனே திரும்பி வந்துவிடுமாறு கூறிக் கடிதம் எழுதினாளாம். என் தந்தை இல்லாத ஊருக்கு எனக்குத் திரும்பி வரப் பிடிக்கவே இல்லை என்று அவர் அதற்குப் பதில் கடிதம் எழுதினாராம்.

என் தாயாரோ சுத்தப் பட்டிக்காடு. அவளுக்கு அதிகம் எழுதப்படிக்கக் கூடத் தெரியாது. 'இங்கிலாந்து எங்கே இருக்கிறது, அங்கே போவதென்றால் எப்படிப் போவது?' என்பதெல்லாம் கூட அவளுக்குத் தெரியாது. கணவனிடமிருந்து இம்மாதிரிக் கடிதம் வந்துவிடவே, அவளுக்குத் தன் உயிரே உடலை விட்டுப் பிரிந்து விட்டதுபோலத்

தோன்றியது. ஆனால் அவள் அதற்காக அழவோ, வருத்தப்படவோ இல்லை. நில புலன்களின் பொறுப்பை நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு குமாஸ்தாவிடம் ஒப்படைத்து விட்டுத் தைரியமாக இங்கிலாந்துக்குப் பிரயாணமாகி விட்டாள். மனம் உண்டானால் மார்க்கம் உண்டு என்று சொல்வார்களே, அது எவ்வளவு உண்மை! கணவனையே தெய்வமாக நினைத்துக் கொண்டிருந்த—ராமன் இருக்கும் இடம் அயோத்தி என்று எண்ணிக் கொண்டிருந்த அவளுக்கு அன்பு வழி காட்டிவிட்டது. என் தந்தைக்கு அவளுடைய அன்பிலும் கற்பிலும் காதலிலும் பரிபூரண நம்பிக்கை இருந்தது. ஆனால் அவள் இவ்வளவு தூரம் தனியாக இங்கிலாந்துக்கு வந்து விடுவாள் என்ற நம்பிக்கைதான் அவருக்கு இல்லை. ஆனால் அன்பினால் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டா?

இங்கிலாந்துக்கு வந்த பின்னரும் அவள் எத்தனையோ தடவை இந்தியாவுக்குத் திரும்பிப் போய் விடுவோம் என்று என் தந்தையிடம் சொல்லியிருக்கிறாள். ஆனால் அவருக்கு இங்கிலாந்தின் சூழ்நிலையும் சீதோஷ்ண ஸ்திதியும் மனத்துக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. ஆகவே, அவர் இங்கிலாந்தை விட்டு இந்தியாவுக்குத் திரும்பிப் போக மனம் ஒப்பவில்லை. அவர் லிவர்பூலில் ஒரு கடையைத் திறந்து அங்கே வேலை செய்யத் தொடங்கினார். சில தினங்களுக்குள்ளேயே வியாபாரம் நன்கு வலுத்து விட்டது. பணம் தண்ணீர்ப் பிரவாகத்தைப்போல வந்து குவியத் தொடங்கியது. வரும்படிக்கு ஒருவழி ஏற்படாவிட்டால் ஒருவேளை என் தகப்பனார் இந்தியாவுக்குப் போய்விடச் சம்மதித்திருப்பாரோ, என்னவோ? ஆனால் கடை வியாபாரம் வலுத்துவிடவே, அது அவருக்கு காலைக் கட்டிப் போட்டது போலாகி விட்டது. ஆகவே, அவர் இந்தியா செல்லும் எண்ணத்தை மனத்திலிருந்து அறவே அகற்றி விட்டார். இந்தியாவில் உள்ள நிலபுலன்களைக் குமாஸ்தாவையே கவனித்துக் கொள்ளச் சொல்லி விட்டு அவர் இங்கிலாந்திலேயே இருப்பது என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

சகோதரா! அந்த நாட்களில்தான் நான் பிறந்தேன். நான் பிறந்ததைக் குறித்து என் தாய் தந்தையருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை. பிள்ளைச் செல்வத்தைப் பெற்றுவிட்டால் பெற்றோருக்கு மகிழ்ச்சி ஏற்படுவது இயல்புதானே? எனக்கு ஹரிஸேன் என்று பெயர் வைத்தார்கள். என்னை அன்புடன் வெகு செல்லமாக வளர்த்தார்கள். நான் பெரியவனானேன். ஆனால் எனக்கு, நான் இந்தியன் என்பது தெரியவே தெரியாது. நான் என்னை ஒரு ஆங்கிலேயனாகவே தான் எண்ணி வந்தேன். இச்சமயத்தில்தான் என் தாயார் இறந்து விட்டாள். என் தகப்பனுருக்கும் இந்தியாவுக்கும் இடையே இணைப்புச் சங்கிலியாக இருந்த அவள் இறந்துவிடவே, என் தகப்பனுருக்கும் இந்தியாவுக்கும் உள்ள தொடர்பு அற்றுப் போய்விட்டது. அவர் முழுக்க முழுக்க ஆங்கிலேயராகவே மாறி விட்டார். அவர் என்னை ஹரிஸேன் என்று கூப்பிடாமல் ஹாரிஸன் என்று அழைத்து வந்தார். தம்மைக்கூடக் கபூர் என்று சொல்லிக் கொள்ளாமல் கூப்பர் என்று சொல்லிக் கொண்டார். இதற்கெல்லாம் காரணம் என்ன, தெரியுமா? பாரதியத்தின் மீது ஆங்கிலேயம் வெற்றி கொண்டதுதான். ஆனால் ஐயோ! என் அம்மா மட்டும் உயிரோடு இருந்தால், நான் இந்தமாதிரித் துர்ப்பாக்கியம் பிடித்த நாட்களைக் காண நேர்ந்திராதல்லவா? நான் அன்னிய தேசத்தவன், அநாதை என்பது மட்டும் அல்ல; தேசப் பற்று என்னும் தனத்தை, மதிப்பில்லா மாணிக்கத்தை, ஐசுவரியத்தை இழந்த அபாக்கியவானாக அல்லவா இருந்தேன்! 'நாம் இந்தியன்' என்ற நினைப்பு எனக்கு இருந்தால் தானே? தேசப் பற்று என்பது என்னவென்று தெரிந்தால் அல்லவா நாட்டின் நினைவு இருப்பதற்கு? இவ்விதம் பதினெட்டு வருஷங்கள் ஓடி விட்டன. நான் கல்லூரியில் கல்வி பயிலும் பொருட்டுச் சேர்ந்தேன். அப்பொழுதுதான் முதன் முதலாக 'நான் இந்தியன்' என்பது எனக்குத் தெரிய வந்தது. (தொடரும்)



குமாஸ்தா:—ஸார், இன்றைக்குச் சாயங்காலம் ஒரு மணி முன்னதாக வீட்டுக்குப் போக உத்தரவு கொடுப்பீர்களா?

மானேஜர் (கோபத்துடன்):—முடியாது: இன்றைக்கு நிறைய வேலை இருக்கிறது.

குமாஸ்தா:—சரி, ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. என் மனைவி இன்று சாயங்காலம் ஜவுளி வாங்கப் போக வேண்டும் என்று சொன்னாள். இன்று எனக்கு அவகாசம் கிடைக்கக் கூடாது என்பதுதான் என்னுடைய விருப்பமும்!

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

உபயோகிக்கிறார்கள்...



ஒரு தனவந்தர் ப்ளு ஜில்லெட்டைவிட உயர்ந்தரக பிளேடை வாங்க முடியாது. ஆயினும் இதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. இந்த புகழ்பெற்ற பிளேடுகள் நீடித்தகாலம் உழைப்பதால் ஒவ்வொரு மனிதனும் சமமான சுகபோகத்தை அனுபவிக்க முடியும். ப்ளு ஜில்லெட் பிளேடுகளையே வாங்குங்கள். (மின்சாரத்தால் கெட்டியாக்கப்பட்டதும் பிரத்தியேகமாக பதப்படுத்தப்பட்டதுமான எஃகில் தயாரித்தது). உங்கள் நாகரிகமான தோற்றத்தினால் வாழ்க்கையில் வெற்றிபெற்ற மனிதர்களிடையே நீங்களும் இடம் பெறுங்கள்.



# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 18. பைத்தியமும், பிறவியாதிகளும்

பல காரணங்களால் பைத்தியம் உண்டாகலாம். அதி தீவிர உணர்ச்சிகளினால் தாக்கப்பட்டு அவைகளுக்கு வசப்பட்டு, மூளை நரம்புகள் அதன் வேகம் பொறுக்க முடியாமல் கெட்டுப் போவதே பைத்தியம் என்பது. பைத்தியம் அதிக துக்கத்தினாலும் உண்டாகலாம்; அதிக சந்தோஷத்தினாலும் உண்டாகலாம்; அதிக கோபத்தினாலும் உண்டாகலாம். அதிக தாபத்தினாலும் உண்டாகலாம். அதிக பயத்தினாலும் உண்டாகலாம். அதிக ஏக்கத்தினாலும் உண்டாகலாம். மிகுந்த வெறுப்பினாலும் உண்டாகலாம். அதிக காமத்தினாலும் உண்டாகலாம். அதீத பிரேமை பைத்தியமாய் மாறுவதும் உண்டு. பொருள் நஷ்டங்களினாலும் உண்டாகலாம். குடும்ப சச்சரவுகளினாலும் பைத்தியம் வரக்கூடும். பிறவியிலேயே மூளை பலவீனமாய் இருப்பதினாலும் உண்டாகலாம். அதி மேதாவித்தனத்தினாலும் உண்டாகலாம். எல்லாவித பைத்தியமும் அந்தந்த உணர்ச்சியின் எல்லைக் கோட்டைத் தாண்டுவதினாலேயேதான் உண்டாகின்றது.

இவ்வுணர்ச்சிகள் எவ்வளவுக் கெவ்வளவு உணர்ச்சியின் எல்லையை அதிகம் தாண்டுகின்றனவோ அவ்வளவுக்கும் பைத்தியம் அதிகமாயிருக்கும். கால் பைத்தியம், அரைப் பைத்தியம், முக்கால் பைத்தியம், முழுப் பைத்தியம் என்று பலவாறாகப் பிரிக்கலாம். கால், அரை பைத்தியங்களெல்லாம் சிறிது சிரத்தையுடன் கவனித்து வேண்டிய சிகிச்சை அளித்தால் குணமாய்விடும். முக்கால் பைத்தியம் சிறிது சந்தேகமே. முழுப் பைத்தியம் நம்பிக்கை வைப்பதற்கில்லை.

பெறற்கரிய மானிடப் பிறவியில் தோன்றிகூன், குருடு, செவிடு இல்லாமல் இருந்தும் மனித வர்க்கத்திலேயே சேர்க்க முடியாதபடி பைத்தியமானது, பைத்தியம் பிடித்தவர்களைச் செய்து விடுகிறது. அவர்களின் நிலை மிகவும் இரக்கத் தகுந்தது. பச்சாதாபப்படத் தகுந்தது. அப்பேர்ப்பட்டவர்களைப் பார்த்துச் சிரித்து நகைப்பது, கேலி செய்வது என்பது மிக்க வருந்தக்கூடிய விஷயமாகும். வெறுக்கக் கூடிய விஷயமும் கூட. மனித பண்பாட்டுக்கே அது முற்றிலும் விரோதமானது. அவர்களுக்கு ஆதரவு தந்து அன்பைக் காட்டிக் கூடிய விரைவில் சிகிச்சை அளித்தால் ஆரம்பத்திலேயே குணமாக்கலாம். அதிகம் முற்றின பைத்தியங்களை அரசாங்க ஆஸ்பத்திரிகளுக்கு அனுப்புவதே நல்லது. பைத்தியத்துக்குப் பலவித சிகிச்சைகள் உண்டு. மூளைக்கு மின்சார அதிர்ச்சி அளிப்பார்கள். தண்ணீர்த் தொட்டிக்குள் மூச்சுத் திணறத் திணற அமுக்குவார்கள். தலை மேல் அருவி நீர் விழும் வண்ணம் நிறுத்தி ஸ்நானம் செய்விப்பார்கள். பல விதமான தைலங்கள், பலவித மருந்துகளை ஊசி மூலம் ஏற்றுவதும் உண்டு. எலுமிச்சம் பழத்தைத் தலைக்குத் தேய்த்து ஜலம் விடுவார்கள். சிரசாசனமும் செய்விக்கின்றார்கள்.

ஆம். சிரசாசனம் செய்தால் குணமாகின்றது. இது அரசாங்க ஆஸ்பத்திரியிலேயே நடக்கின்றது. ஒரு நண்பர் பைத்திய சிகிச்சை ஆஸ்பத்திரிக்குச் சென்று, கொஞ்சம் தெளிந்த அதாவது நாம் ஏதாவது சொன்னால் தெரிந்து புரிந்து கொள்ளக் கூடிய பைத்தியங்களுக்குக் காலையில் ஆசனங்கள் சிலவற்றை முறைப்படி சொல்லித் தந்துக் கொண்டிருந்தார். நீர் வீழ்ச்சி ஸ்நானத்தினால் உண்டாகும் பலன், தைல ஸ்நானப் பலன், மின்சார அதிர்ச்சியினால் உண்டாகும் பலன், முதலியவைகள் சிரசாசனத்தில் கிடைக்கிறது என்பது உண்மை. அவைகளனைத்தும் மூளைக்கு அதிக ரத்த போஷணை உண்டாக்கவும், ரத்த சஞ்சாரம் மூளையின் எல்லாப் பகுதிகளுக்கும் கிடைக்கவும் செய்வதற்கே செய்யப்படுவன. சிரசாசனம் செய்யும்போது பூமியின் ஆகர்ஷண சக்தியினால் ரத்தம் மூளைக்கு நன்கு இழுக்கப்பட்டு, ரத்த போஷணை அடைகின்றது. அதனால் நாளுக்கு நாள் மூளை பலமடைந்து, பைத்தியமும் தெளிகின்றது.

எடுத்ததும் சிரசாசனம் செய்யக்கூடாது. உடலைப் பலவந்தமாய் நீட்டி மடக்கி நரம்புகள், தசைப் பிடிப்பைச் சற்று சரிப் படுத்திக்கொள்ள வேண்டும். புஜங்காசனம், சலபாசனம், பஸ்சிமோத்தானாசனம், திரிகோணாசனம் முதலியவைகளை ஒரிரு மாதம் செய்ய வேண்டும். அதற்குள் சர்வாங்காசனத்தை அரைமணியோ அல்லது இரு




“என்ன பாகவதர்வாள், நீங்கள் ஏன் வாய்ப் பாட்டோடு நிறுத்தி விட்டீர்கள்?......மோர்சிங்கும் கற்றுக் கொள்ளுங்களேன்!”

“ஏன் அதைக் குறிப்பிட்டுச் சொல்கிறீர்கள்...... வீணை, பிடில் போன்றவைகளைக் கற்றுக் கொள்ளக் கூடாதா?”

“காரணமாய்த்தான் சொல்லுகிறேன்.....மற்றவைகளோடு நீரும் வாயால் பாடலாம்......மோர்சிங் வாசிக்கும்போது நீங்கள் பாட முடியாதே! அதற்காகத்தான்!”

பத்து நிமிஷம் வரையோ செய்யப் பழகிக் கொள்ள வேண்டும். ஒரே தடவையில் முடியாவிட்டால் இரண்டு, மூன்று தடவைகள் செய்து வேண்டிய நேரத்தைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். மற்ற ஆசனங்களை மும்மூன்று தடவைகள் செய்தால் போதும். பின் சாந்தி ஆசனம், நாடி சுத்தியும் கூடச் செய்ய வேண்டும். பிறகுதான் சிரசாசனம் ஆரம்பிக்கலாம். அதுவும் எடுத்ததும் அதிக நேரம் நிற்கக்கூடாது. முதல் வாரத்தில் ஒவ்வொரு நிமிஷமாக மூன்று தடவைகளும், பிறகு வாரத்தில் ஒரு நிமிஷ விதம் அதிகப்படுத்திக் கொண்டே வந்து, பத்து நிமிஷ விதம் மூன்று தடவைகள் செய்யலாம். பிறகு தடவைகளைக் குறைத்து வந்து அதே நேரத்தை ஒரே தடவையிலும் செய்யலாம். ஆக அரை மணி நேரத்துக்கு மேல் செய்ய வேண்டியதில்லை. மாலையிலும் சர்வாங்காசனம் மத்ஸ்யாசனம் முதலியவைகளை மட்டும் செய்யலாம்.

சிலர் கேட்கலாம். ஏன் ஸார்! ஒரு நாளைக்கு இருபத்துநாலு மணி நேரம் நாம் சாதாரணமாய் இருந்துவிட்டு, ஏதோ பத்து நிமிஷமோ, அரை மணி நேரமோ மட்டும் தலைகீழாய் நின்றுவிட்டால் போதுமா! சர்வாங்காசனத்தில் 'அரை மணியில் என்ன அப்படிப் பிரமாத பலன் கண்டுவிட முடியும்! அப்படி இந்த அரை, ஒருமணி நேரம் பலன் சாதாரணமாய் இருக்கும்போது இழுக்கு போகாதா என்று கேள்வி கேட்கலாம்.

மருந்தை நாம் எவ்வளவு சாப்பிடுகின்றோம்! வயிறு நிறையும் வரை சாப்பிடுகின்றோமா! ஏதோ மிகச் சிறிய அளவுதானே! கஷாய மூலமாகவோ, மாத்திரைகளாகவோ, தூளரூபமாகவோ, லேகியமாகவோ, பவுடராகவோ உபயோகிக்கின்றோம். அதைப் போலவேதான் ஆசனமும், சர்வாங்காசனம் செய்யும்போது ரத்தத்தில் அதிகப்படியான தைராய்டின் ரஸம் கலக்கின்றது. அதுவே ஒருநாளைக் கெல்லாம் போதுமானது. சிரசாசனம் செய்யும்போது பிட்யூடரியின் ரஸம் அதிகம் ரத்தத்துடன் கலக்கப் படுகின்றது. அதுவே மருந்தைவிட நூறு மடங்கு குணம் செய்யக் கூடியது. இவைகள் செய்யும்போது அதன் ரஸங்கள் மட்டும் ரத்தத்துடன் கலப்பதல்லாமல், அதே சமயம் அவை ஆரோக்கியமாய் இருக்க, நீண்டகாலம் உழைக்க ரத்தப் போஷணையால் பலப்படுத்தப் படுகின்றது. போதுமே! மற்றும் என்ன வேண்டும்! சிரசாசனம் நல்லது என்றால் நாளெல்லாம் தலைகீழாக நிற்கவேண்டுமா! சர்வாங்காசனம் நல்லது என்றால் நாளெல்லாம் செய்ய வேண்டுமா! வேண்டியதில்லை. மருந்தைப் போலவேதான் இதுவும். சிறிது நேரம் செய்தாலும் அபரிமித பலன் உண்டு. எனவே எல்லோரும் செய்து ஆரோக்கியமாய் இருக்கலாம். நோயாளிகள் அவரவர்களுக்கு வேண்டிய ஆசனங்களைச் செய்து நோயைப் போக்கிக்கொள்ளலாம். மூளைக் கோளாறுகளினால் பாதிக்கப்பட்டவர்களை ஆசனங்களால் குணப்படுத்தலாம். இவைகளையெல்லாம் ஆசன நிபுணர்களின் ஆலோசனையின்பேரில் செய்ய வேண்டியது.

ஆசனம் செய்யத் தெரிந்தவர்கள் எல்லாம் ஆசன நிபுணர்கள் ஆகிவிட மாட்டார்கள். உடற்கூறின் வன்மையை அறிந்தவர்களாய் இருக்க வேண்டும். பல வருஷ அனுபவமும் வேண்டும். அவர்களின் ஆலோசனைப்படி நடப்பதே உத்தமம்.

சிலருக்கு ஒரு விஷயத்தைத் தீவிரமாய் யோசித்துக் கொண்டிருக்கும்போதோ, ஒரு காரியத்தைத் தீவிரமாய்ச் செய்து கொண்டிருக்கும் போதோ, யார் என்ன சொன்னாலும் காது கேளாது. தன் முன்னால் நடப்பதை அறியார்கள். ஆனால் இவையெல்லாம் பைத்தியத்தில் சேர்க்கையல்ல. மனத்தை ஏகாக்கிரமாக்கி ஒரே விஷயத்தில் செலுத்துவதால் உண்டாகும் நிலைமை. சிலர் ஏதோ ஒரு விஷயத்தை யோசித்துக் கொண்டு, தான் செய்யும் காரியத்தை அர்த்தமில்லாமலும் செய்து கொண்டிருப்பார்கள். அது அவர்களுக்கே கூடத் தெரியாது. அவர்கள் நினைத்துக் கொண்டிருந்த கலைப்பிலிருந்து சிறிது கவனத்தைத் திருப்பிய பிறகுதான் அவர்கள் அதை உணர்ந்து கொள்ளுவார்கள்.

ஒரு பெரிய விஞ்ஞானி மழையில் குடைப் பிடித்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தாராம். கடுங்கும் குளிர் அவர் அறைக்கு வந்ததும், குடையைத் தன் படுக்கையில் படுக்கவைத்து, நன்றாய்ப் பத்திரமாய்ப் போர்வையினால் போர்த்திவிட்டு, தான் போய் மூலையில் கைகட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாராம். அவர் தன் நிலையை உணர சிறிதுநேரம் ஆயிற்றாம். அதைப்போல பல சம்பவங்கள் நம் வாழ்க்கையில் நடப்பதுண்டு. "குழாயில்ஜலம் வரவில்லை" என்பதற்குப்பதிலாக. "ஜலத்தில் குழாய் வரவில்லை" என்று சொல்லுவதில்லையா! "உனக்கு மண்டையிலே மூளை யிருக்கின்றதா!" என்று ஆத்திரமாய்ச் சொல்லும் போது "உனக்கு மூளையிலே மண்டையில்லையா!" என்று வந்து விடவில்லையா!

இவைகளெல்லாம் ஏதோ ஒரு விஷயத்தில் கவனம் செலுத்திக் கொண்டு ஒன்றைச் செய்வதினால் நேர்ந்து விடுவது. ஆத்திர, அவசரப் பேச்சு

களில் பதப் பிரயோகம் மாறுவதுமுண்டு. இவை களெல்லாம் வைத்தியத்தில் சேர்க்கையல்ல.

சிலருக்கு மூளை வேலை செய்யும் அளவு வாய், நாக்கு, நரம்புகள் முதலியன ஒத்துழைத்து வேலை செய்யாது. அதனால் பேச்சு தத்தித் தத்தி வரும். சிலருக்கு அந்த நரம்புகளுக்குச் சரியானபடி உணர்ச் சியில்லா திருந்தாலும் அம்மாதிரி உண்டாவ துண்டு. ஐஸ்கிரீமை ஒரேயடியாய் 2, 3 கப் சாப் பிட்டுப் பாருங்கள். எவ்வளவு அழகாய்ப் பேச வருகின்றது என்பது தெரியும்! நாம் நினைத்த வேகத்தில் பேச முடியாது. அந்த நிலைமை தான் தெத்து வாய்க்காரர்களுக்கும். அவர்களும் சிரசாசனம் செய்வதால் குண முண் டாகும். ஆனால் சிரசாசனம் செய்வதற்கு முன் நாக்கை நீட்டல், மடக்கல், சுழட்டல் போன்ற நாக்குப் பயிற்சிகளையும், அழகு காட்டுவது போல் வாயை அந்தப் பக்கம், இந்தப் பக்கம் கொண்டு வருவது கழுத்தை முன், பின், பக்கங்களில் திருப் பும் பயிற்சிகளையும் செய்ய வேண்டும். சிரசாசனம் செய்த பின்பும் இப் பயிற்சிகள் அனைத்தும் செய்ய வேண்டும். இம்மாதிரி காலை, மாலை விடா மல் செய்து வந்தால் சிறிது சிறிதாக வாய்த் தெத் தல் குறைந்து போய் நன்றாகப் பேசவரும்.

மற்றொரு வித மூளைக் கோளாறும் உண்டு. அதற்கு "ஹிஸ்டீரியா" என்று சொல்லுவார்கள். இரவில் சாதாரணமாய் நம்மைப் போல படுத்துத் தூங்குவார்கள். திடீரென எழுந்து பல காரியங் களைச் செய்வார்கள்; நடப்பார்கள்; எழுது வார்கள். வெளியில் சென்று வருவார்கள். பிறகு வந்து படுத்து விடுவார்கள். காலையில் எழுந்திருந் தால் இரவு செய்த காரியங்கள் ஒன்றுமே ஞாப கத்தில் வராது. இந்த வியாதி சிரசாசனமும் மற்றும் சில ஆசனங்களையும் ஒழுங்காகச் செய்து வந்தால் குணமாகிவரும்.

சிலருக்கு வலிப்பு வருவதுண்டு. வலிப்புகளி லும் பலவித முண்டு. இவைகள் பொதுவாக கோளங்களின் பிசகினாலும், மூளைக் கோளாறி னாலும் உண்டாவது. இவைகளும் சர்வாங்காசனம் சிரசாசனம் செய்து வந்தால் சிறிது, சிறிதாகக் குறைந்து குணமாகும். (தொடரும்)

## என்ன வர்ணம்?




மனைவி:—எனக்கு ஒரு மேக வர்ணப் புடவை வாங்கித் தாருங்களேன்!

கணவன்:—ஓ, பேஷா உனக்கு மேக வர்ணப் புடவை வாங்கித்தரேன். ஆனால் மேகம் என்ன வர்ணம் என்பதுதான் மறந்து போச்சு.

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன்

## செய்தீர்களா?



மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உங்கள் பற்களை வெண்மையாகவும், ஈறுகளை ஆரோக்கியமாகவும், சுவாசத்தை இனியதாகவும் ஒரே சமயத்தில் விளங்கச் செய்கிறது.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையில் அடங்கியுள்ள பொருள்கள் வாயில் ஊறும் கெட்ட நீர்களையும் புளிப்புச் சத்தையும் கரைத்து பற்கள் பழுதடையாமல் காப்பாற்றி விகாரமான கறைகளையும் அகற்றி விடுகின்றன. இப்பொழுதே ஒரு டியூப் மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை வாங்கி தினமும் இரண்டு தடவை உங்கள் பற்களைச் சுத்தம் செய்து வாருங்கள்.

"பெருமையைப் பெறத் தகுதி வாய்ந்தவர். உங்களுக்கு நான் பெருமை தருகிறேன். பல வருஷங்களாக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன."

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குக!**




வியாபார விபரங்களுக்கு: ஜே.எல்.மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட் மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.



# செல்வநாயகம்

ஸ்ரீவத்சன்

"கைதிகளின் உதவிநிதிக்காகத் தங்கள் சினிமாவின் ஒரு நாள் வசூல் தொகையைக் கொடுக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார் சிறைச்சாலை அதிகாரி.

"அதற்கென்ன அப்படியே செய்கிறேன். மேலும் கைதிகளுக்கு என்னாலான உதவிகளையெல்லாம் செய்யச் சித்தமாயிருக்கிறேன். கைதிகள் எல்லாருமே குற்றம்செய்தா சிறைக்குள் வருகிறார்கள்? நல்லவர்களும் வந்து விடுகிறார்கள்" என்றார் பிரபல சினிமா நட்சத்திரத்தின் கணவர் செல்வநாயகம்.

சிறைச்சாலை அதிகாரி அவருக்கு நன்றி செலுத்திவிட்டுச் சென்றார். அவர் சென்றவுடன் செல்வநாயகத்தின் சிந்தனை சுழன்றது. அவர் உள்ளம் பழைய சம்பவங்களை நினைக்கத் தொடங்கியது.

## 2

ஒன்று, இரண்டு, மூன்று.

மணி மூன்று அடித்து ஓய்ந்தது.

அந்தச் சிறையில் இருந்த கைதிகள் எல்லோரும் தாங்கள் கைதிகள் என்பதையும் மறந்து குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் நாற்பத்துநாலாம் நம்பர் கைதி சிங்காரம் மட்டும் தூங்கவில்லை.

அவன் கையில் கிழிந்துபோன ஒரு சினிமாப் பத்திரிகையின் காகிதம் கிடந்தது. அதில் ஒரு அழகியின் படமும் அதன் அடியில் ஸ்ரீமதி சசிகலாதேவி என்றும் எழுதியிருந்தது.

அந்தப் படத்தைப் பார்த்தான். புதிதாக வந்த கைதிகள் சொன்னதையும் நினைத்துப் பார்த்தான். அவன் மார்பு விம்மியது.

வெளியே அவ்வப்போது சில நாய்கள் குரைக்கும் சத்தம் மட்டும் அந்த இரவின் அமைதியைக் குலைத்து வந்தது. சிறையின் சுவர்களில் பாதி உயரத்துக்கு அடிக்கப்பட்ட தாரின் நாற்றம் அந்த அறை முழுவதும் வீசிக் கொண்டிருந்தது.

ஒரு மூலையில் சுவர் ஓரமாகச் சாய்ந்த வண்ணம் நின்று கொண்டிருந்தான் சிங்காரம். தன் கையிலிருந்த அந்தச் சினிமா நடிகையின் படத்தைப் பார்த்தான். அது அப்படியே தன் காதல் மனைவியின் சாயலாக இருப்பதை எண்ணிப் பார்த்து வியந்தான்.

அவன் இந்தச் சிறைக்கு வந்து ஏழு வருடங்களாகி விட்டன. அவன் சிறைச்சாலைக்கு வந்த புதிதில் வெகு நேரம் வரை தூங்கவே மாட்டான். ஒரு மாதமானதும் அவன் எட்டு மணி அடித்ததுமே படுத்து விடுவான். பகலெல்லாம் கடுமையாய் வேலை செய்து வரும் கடுங்காவல் கைதி அவன். ஆனால் அன்று ஏனோ மணி மூன்றாகியும் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. அவன் ஏன் கண் விழிக்க வேண்டும்? இவ்வளவுக்கும் பொழுது விடிந்தால் அவன் ஒரு மாஜி கைதியாகி விடுவான். இன்றோடு அவனுடைய ஏழு வருட கடுங்காவல் தண்டனை முடிவடைகிறது. நாளைய தினம் விடுதலை கிடைத்து விடும். உடனே கிராமத்துக்குப் போகலாம். ஏழு வருட காலமாகப் பிரிந்திருந்த தன் மனைவி செல்வியைப் பார்க்கலாம். அப்பப்பா! ஏழு வருட காலமல்லவா? செல்வி ஆசையோடு ஓடி வந்து அணைத்துப் பிடித்துக் கொள்ளுவாள் என்று நினைத்தான். கண்ணைச் சுழற்றியது. சினிமா நடிகை சசிகலாதேவியைப் பற்றிக் கேள்விப் பட்டதெல்லாம் அவன் நினைவுக்கு வந்தன.

உடலை வருத்திப் பாடுபடும் குடியானவன்தான் சிங்காரம்! அவனுடைய கிழத் தாய்தான் அவனுக்கு வீட்டில் துணை. ஊரிலிருந்த சில நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு சாகுபடி செய்து வந்தான். மிகவும் நாணயமானவன். தப்பு தண்டாவுக்குப் போகமாட்டான்.

அதே ஊரிலிருந்த சாமிநாதனின் ஒரே மகள்தான் செல்வி. ஊரிலிருந்த இளம் காளைகளெல்லாம் செல்வியை அடையும் பாக்கியம் தங்களுக்கு உண்டா என்று ஏங்கிக்கொண்டிருந்ததிலிருந்தே செல்வியின் அழகைத் தெரிந்து கொள்ளலாம்.

நாட்டாண்மைக்கார முத்துசாமியின் அதிகாரம் அந்தக் கிராமத்தில் உச்சத்தில் இருந்தது. அவனுடைய இரண்டாவது மனைவி காலமானதும் அவனுடைய கவனமெல்லாம் செல்வியிடம் சென்றது. அவளை அடைய எண்ணினான். தன்னுடைய செல்வாக்கால் அவளை அடைந்து விடலாம் என்று நம்பினான். சாமிநாதனிடம் சொன்னான். மிரட்டினான்; கெஞ்சினான். ஆனால் செல்வியும் சிங்காரமும் உள்ளன்புடன் ஒருவரை ஒருவர் நேசிப்பதை அறிந்த சுவாமிநாதன் நாட்டாண்மைக்காரரின் அதிகாரத்துக்குக் கட்டுப்பட மறுத்தான்.

கிட்டாத பொருள் கிட்டியதைப் போலிருந்தது சிங்காரத்திற்கு. கிராமாந்திர சர்வாதிகாரியான நாட்டாண்மைக்காரர் எங்கே தன்னுடைய அதிகாரத்தால் தன் எண்ணத்தில் மண்ணைப் போடுவாரோ என்று எண்ணிய சிங்காரத்துக்குச் செல்வி மாலை யிட்டாள். அடுத்த மாதம் சாமிநாதன் இறந்தான்.

செல்வி சிங்காரம் அவர்களுடைய வாழ்க்கை தொடங்கியது. தங்கு தடையற்ற நீரோட்டம் போல் அது சென்று கொண்டிருந்தது. காலையில் சிங்காரம் வயலுக்குப் போவான். வீட்டு வேலைகளை முடித்துவிட்டுக் கஞ்சியை எடுத்துக் கொண்டு களத்து மேட்டுக்குப் போவாள் செல்வி. உலகையே மறந்து அவர்கள் பேசுவார்கள். பொழுது சாய்ந்ததும் அவர்கள் திரும்பி வருவார்கள். அவன் கழனிக்குக் குளிக்கப் போவான். அதற்குள் அவள் சோறாக்குவாள். இருவரும் சாப்பிட்டு விட்டுக் குடிசைக்கு வெளியே கிடக்கும் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து நேரம் போவதில் நினைப்பு இல்லாமல் பேசிக் கொண்டிருப்பார்கள்.

இவர்கள் வாழ்க்கையைக் குலைக்கச் சதி செய்தார் நாட்டாண்மைக்காரர். ஒரு கொலை வழக்கில் சிங்காரத்தைச் சம்பந்தப் படுத்தினார். சரியான சாட்சிகளை ஜோடித்து அவனுக்கு ஏழு வருட கடுங்காவல் தண்டனை கிடைக்கும்படி செய்து செல்வியைத் தான் மணந்துகொள்ள முடியாமல் போன ஆத்திரத்தை அவர் தீர்த்துக் கொண்டார்.

வழக்கு விசாரணையின் போது ஒவ்வொரு நாளும் அவள் அவனைப் பார்க்கக் கோர்ட்டுக்கு வருவாள். கண்ணீர் விடுவாள். கோர்ட்டுக்கு வருபவர்களெல்லாம் அந்த இளம் தம்பதிகளுக்காக வருத்தப்படுவார்கள். அன்று அவனுக்கு ஏழு வருட கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டதும் கோர்ட்டிலேயே “ஐயோ, மச்சான்! ஒரு நாள் கூட உங்களை விட்டுப் பிரியாத நான் எப்படி ஏழு வருடம் இருப்பேன்!” என்று அலறினாள். உடனே மூர்ச்சையானாள். “செல்வி, செல்வி! அநியாயமா உன்னை நிராதரவா விட்டுவிட்டுப் போகிறேனே!” என்று கதறினான் சிங்காரம். கோர்ட்டிலிருந்தவர்களுக்கு மட்டும் கண் இருந்திருந்தால் அவைகள் கண்ணீரை வெள்ளமாகப் பெருக்கி யிருக்கும்.

அதன் பிறகு அவனை அந்த ஊர்ச் சிறையிலேயே வைத்திருந்த ஒரு வருட காலம்வரை அவள் அடிக்கடி அவனைப் போய்ப் பார்ப்பாள். அவளிடம் பேசவிட்டு அவனைத் திரும்பப் பிரித்து வெளியே அனுப்புவது வார்டர்களுக்கே பரிதாபமா யிருக்கும்.

அடுத்த வருடம் ஜில்லா தலைமை ஜெயிலுக்குக் கொண்டு போனார்கள். செல்வியால் அவ்வளவு தூரம் போய்ப் பார்க்க அடிக்கடி முடியாது. ரயிலுக்கு அவளிடம் பணம் ஏது? கால் நடையாக நாற்பது மைல் சென்று எப்போதாவது பார்ப்பாள்.

அடுத்த ஒரு வருடம் கழித்து வெளி ஜில்லாக்களுக்கு அவனைக் கொண்டு போய்விட்டதால் செல்வியைப் பார்க்க முடியவில்லை. இப்படியாக ஏழு வருடங்கள் சென்று விட்டன.

மணி ஐந்தடித்தது. சரி, இன்னும் ஒரு மணி நேரம். அதன் பின் விடுதலை கிடைத்ததும் அடுத்த ரயிலுக்கேவண்டி ஏறிக் கிராமத்துக்குப் போய்விட வேண்டியது. தன் பிரிவால் வாடும் செல்வி தன்னைக் கண்டதும் மெய் மறந்து போவாள். செல்விக்குத்தான்



தன்னிடம் எவ்வளவு அன்பு. அன்று தீர்ப்புக் கூறுகையில் அவன் பட்ட வேதனையை, துன்பத்தை மறக்க முடியுமா? ஊருக்குப் போக வேண்டியது. செல்லியை அழைத்துக் கொண்டு பட்டணத்துக்கு வந்துவிட வேண்டியது. நாட்டாண்மைக்காரனுடன் நமக்கு என்ன வம்பு? அவன் இருக்குமிடமே இருக்கக் கூடாது. பட்டணத்தில் எவ்வளவோ மில்கள் இருக்கின்றன. உழைத்துப் பாடுபட உடம்பைக் கடவுள் கொடுத்திருக்கும்போது நான் ஏன் பயப்பட வேண்டும்? ஆகா, என்னைக் கண்டதும் அவள் எப்படிப் பூரித்துப் போவாள்! அத்தான் என்று ஓடி வந்து கட்டிக் கொள்வாள். இந்தத் தாடி மீசையை யெல்லாம் எடுத்துவிட்டு நல்ல உடுப்பு உடுத்திக் கொண்டுதான் போக வேண்டும். செல்லிக்கும் ஏதாவது புடவை வாங்கி எடுத்து போகவேண்டும்.

மணி ஆறடித்தது.

சிறைச்சாலையின் பயங்கரக் கதவு திறக்கப்பட்டது.

"உனக்கு விடுதலை ஆகிவிட்டது. நீ போகலாம்!" என்றார் ஜெயில் அதிகாரி. அவன் ஏழு வருஷம் சிறையில் வேலை செய்ததற்காகக் கூலி ரூபாய் நூற்றையும் அவனுக்குக் கொடுத்தார்.

வெளியே வந்தான் அவன்.

ஒரு மூச்சு அவன் அடிவயிற்றிலிருந்து வந்தது. அது ஆறுதல் பெற்ற சுதந்தர மூச்சு.

சிறையில் தான்விட்ட மூச்சுக்கும் வெளியே விடும் மூச்சுக்கும் பெரிய வித்தியாசம் இருப்பதை உணர்ந்து மகிழ்ந்தான்.

கடைத்தெருவுக்குப் போனான் சிங்காரம். செல்லிக்குப் புடவை மற்றும் அவனுக்குப் பிடிக்கக் கூடிய சில சாமான்கள் எல்லாம் வாங்கிக் கொண்டான்.

பக்கத்திலிருந்த ஹோட்டலில் போய் உட்கார்ந்து ஒரு கப் காப்பி கொண்டுவரச் சொன்னான் அவன். காப்பி வரச் சிறிது நேரமாகியது. உட்கார்ந்தபடி ஹோட்டலைச் சுற்று முற்றும் பார்த்தான். எங்கே பார்த்தாலும் சினிமா விளம்பரங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. பெரிய அளவில் ஒரு சினிமா நடிகையின் படம் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது. அதையே திரும்பித் திரும்பிப் பார்த்தான். அவன் கண்களில் ஒளி வீசியது. அவ்வளவைப் படத்திலிருந்தவளின் சாயல் செல்லி சாயலாக இருந்தது. ஆமாம், செல்லிக்கும் இப்படியெல்லாம் உடை உடுத்திப் பார்த்தால் இப்படித்தான் இருப்பாள். ஒருவேளை செல்லிதான் இதுவோ! சேச்சே, எப்படி யிருக்க முடியும்? செல்லியின் நாட்டுப்புறம் எங்கே? நாகரிகமே உருவெடுத்து வந்தாற் போன்ற இந்த அழகிய பட்டணத்துச் சினிமா நடிகை எங்கே!

இதெல்லாம் பிரமை. செல்லி இத்தனை நேரம் சுள்ளி பொறுக்கிக் கொண்டிருப்பாள்.





நான் போனவுடனே செல்வியிடம் சொல்லிக் கீரைக் குழம்பு வைக்கச் சொல்ல வேணும்.

காப்பி கொண்டுவந்து வைத்தார் சர்வர்.

“என்ன ஐயா! வெறித்துப் பார்க்கிறாய் அந்தப் படத்தை?”

“ஒன்றும் இல்லீங்க: இந்த அம்மா யாரு?”

“என்ன ஐயா! நீர் ஒரு கிணற்றுத் தவளையோ? நேற்றுப் பிறந்த குழந்தையைக் கேட்டால்கூடச் சொல்லுமே! இந்த அம்மா தான் சினிமா ராணி சசிகலாதேவி என்று!”

“அப்படிங்களா! நான் நாட்டுப் புறத்தான். எனக்கென்ன தெரியும்!”

சில்லறையைக் கொடுத்து விட்டு வெளியே வந்தான். அவன் மூளை வேகமாக வேலை செய்தது. அசங்கியமாக வளர்ந்திருந்த தலை மயிரை வெட்டிக் கொள்ளப் பக்கத்திலிருந்த தலையலங்காரச் சாலைக்குள் சென்றான்.

அங்கே கிடந்த சினிமா சஞ்சிகையின் மேலட்டையிலும் அதே படம். சினிமா ராணி சசிகலாதேவியின் உருவப் படம் மூவர்ணங்களில் ஜொலித்துக் கொண்டிருந்தது.

அதை எடுத்துப் பார்த்தான். செல்வி மாதிரிதானே இருக்கிறது? கண்கூட அப்படியே இருக்கிறதே! அவள் எப்படி இப்படி ஆக முடியும்? உலகத்திலே ஏன் ஒருவரைப்போல இன்னொருவர் இருக்கக் கூடாது?

“ஏன் ஐயா? அந்தப் படத்தைப் பிறகு பார்க்கலாம். கிராப்பா ஷேவிங்கா?” என்று கேட்டார் தலை அலங்காரத் தொழிலாளி.

“கிராப்புதான்” என்று கூறிவிட்டு “இந்த அம்மா யாரு?” என்றான் சிங்காரம்.

“இவர்தான் சசிகலாதேவி! மூன்று வருஷ காலமாகச் சினிமா வானில் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் நட்சத்திரம். இதுவரை இப்படி ஒரு நட்சத்திரம் இருந்தது மில்லை, இருக்கப் போவது மில்லை. அடாடா! அந்த அம்மாவின் நடிப்பு. அதுவும் கிராமாந்தரத்துப் பெண்கள் போல நடிக்கும்போது அசல் நாட்டுப்புறத்துப் பெண்கள் கெட்டார்கள் போங்கள்! இன்றைக்குச் சசிகலாவே அவர் நடித்த படத்தின் நூறாவது நாள் விழாவுக்குத் தலைமை வகிக்கப் போகிறார். வேண்டுமானால் சினிமாக் கொட்டகையில் நேரிலேயே பார்க்கலாம்” என்றார் அந்தத் தலையலங்காரத் தொழிலாளி.

நன்றாகக் கிராப்பு செய்து கொண்டு வெளியில் வந்தான் சிங்காரம்.

வழிநெடுக சசிகலாவின் உருவம் பொறித்த சுவரொட்டிகள் காணப்பட்டன. விடாமல் பார்த்துக் கொண்டே வந்தான் அவன். நிச்சயமாகச் செல்வியே தான். இன்றைக்குச் சினிமாவுக்குப் போய் அது செல்விதானா என்று பார்த்துவிட வேணும்.

சிங்காரம் சினிமா கொட்டகைக்கு வந்து உட்கார்ந்து விட்டான். மேடையில் சசிகலா வந்து உட்கார்ந்தாள். அவள் பேச ஆரம்பித்தாள். சிங்காரம் அவளைக் கூர்ந்து கவனித்தான். நிச்சயமாகச் செல்விதான். கழுத்தில் மீன் அடையாளமுள்ள மச்சம்கூட அப்படியே இருக்கிறதே!

‘செல்வி!’ என்று ஆவலுடன் அழைத்தான்.

சசிகலாவின் காதில் “செல்வி!” என்று யாரோ கத்தியது நன்றாகக் காதில் விழுந்தது. அவள் பிரசங்கம் தடைபட்டது. ‘என் கணவர் ஒருவருக்குத்தானே இந்தப் பெயர் தெரியும்? அவர் வந்து விட்டாரோ?’ என்று நினைத்தாள். ஏதோ நாலு வார்த்தைகள் பேசி விட்டுக் கிளம்பி விட்டாள்.

அவள் மனம் பின்னோக்கிச் சென்று பழைய நினைவுகளைக் கொண்டுவந்து மனக் கண்முன் நிறுத்தியது. கணவன் சிறைக்குச் சென்ற மூன்றாவது வருடம் காட்டில் சுள்ளி பொறுக்கப் போனபோது சினிமாப் படம் எடுக்க வந்த முதலாளி ஒருவர் அவளது அழகைப் பார்த்து அவளைத் தன் கம்பெனியில் சேர்த்து விட்டார். செல்வியும் தன் வறுமையைப்போக்க அதை ஏற்றுக்கொண்டாள்.

வீடு வந்தது. போய் ஹாலில் உட்கார்ந்தாள். ‘செல்வி’ என்று தன்னைக் கூப்பிட்டது தன்னுடைய கணவர்தான். தன்னைத் தொட்டுத் தாலி கட்டியவர்தான் என்பதை அவள் உணர்ந்தாள். அவள் மனம் எதையோ நினைத்துப் போராடிக் கொண்டிருந்தது.

* * *

சிங்காரம் மூர்ச்சை தெளிந்து எழுந்த போது சினிமா கலைந்து எல்லாரும் வெளியில் போய்க் கொண்டிருந்தனர். சிங்காரமும் எழுந்து சென்றான். சசிகலாதேவியின் வீட்டு விலாசத்தைத் தெரிந்து கொண்டு சென்றான்.

காவல் காப்போனிடம் தான் வந்திருப்பதாகச் சொல்லி அனுப்பினான். அவனும் உள்ளே சென்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் வெளியில் வந்து சிங்காரத்தை அழைத்துச் சென்றான்.

நல்ல அலங்காரமான சோபாவில் சசிகலாதேவி சாய்ந்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள்.

“செல்வி, என்னை உனக்குத் தெரியவில்லையா?” என்று கேட்டான் சிங்காரம். அதைக்

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. "ரஜூலா"

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சென்னையிலிருந்து | 22 | மே | 1952 | நாகப்பட்டினத்திலிருந்து | 23 | மே | 1952 |
| | 16 | ஜூன் | 1952 | | 17 | ஜூன் | 1952 |
| | 11 | ஜூலை | 1952 | | 12 | ஜூலை | 1952 |

**தேதிகளில் மேற்கண்ட கப்பல் புறப்படலாமென எதிர்பார்க்கப்படுகிறது**

சென்னையிலிருந்து மே மாதம் 22-ம் தேதி புறப்பட இருக்கும் S. S. 'ரஜூலா'வுக்கு பெர்த் வசதியுள்ள எல்லா டிக்கட்டுகளும் ஏற்கெனவே பதிவு செய்யப்பட்டு விட்டன.

பினங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூருக்கு கார்கோ சாமான்களை நேரடியாக ஏற்றிச் செல்லவும், பாங்காக், ஹாங்காங், ஜப்பான் மற்றும் தூரக் கிழக்கு திசையிலுள்ள இதர ஊர்களுக்குச் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி அனுப்பும்படியும் ஏற்றுக் கொள்ளப்படும்

இதர விவரங்களுக்குத் தயவுசெய்து விண்ணப்பிக்கவும் :

பின்னி & கோ. (மதராஸ்) லிமிடெட்
7, அரமனைக்கார தெரு, மதராஸ்

மதுரா கம்பெனி லிமிடெட்
முதல் லைன் பீச்ரோடு, நாகப்பட்டினம்

# இன்றே ஒரு டின் வாங்குங்கள்




எல்லா பிரபல ஸ்டோர்களிலும் கிடைக்கும்

விடமின் $B_1$ சத்து சேர்ந்த உங்களுடைய மால்டெட் மில்க்



விற்பவன் :—மண்வெட்டி வேணுமா, சாமி, மண்வெட்டி!

தகப்பனார் :—பக்கத்து வீட்டிலே போய்க் கேள் அப்பா. அவங்க வாங்கு வாங்க, போ!

பையன் :—ஏன் அப்பா அவனைப் போகச் சொல்லி விட்டாய்? நம் வீட்டிலே கூட மண்வெட்டி இல்லையே!

தகப்பனார் :—அது சரிதாண்டா, முட்டாள்! பக்கத்து வீட்டு மாமா மண்வெட்டி வேணும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவர் மண்வெட்டி வாங்கி விட்டாரானால், நம்ம வீட்டுக்கு அது தேவையாயிருக்கும் போது இரவலாகக் கேட்டு வாங்கிக் கொள்ளலாம்!

---

கேட்டதும் அவன் திடுக்கிட்டான். மறு கிமிஷம் ஒரு முடிவுக்கு வந்தாள்.

"நான் செல்வியுமில்லை அல்லியுமில்லை."

"என்ன செல்வி, என்னை உனக்குத் தெரியவில்லையா? நான்தான் உன் கணவன், ஆசை அத்தான் சிங்காரம்."

"எனக்குக் கணவன் இல்லை. நீ யாரோ தெரியாது. பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து வழி தவறி வந்துவிட்டாயா என்ன?"

"இதென்ன அநியாயம்? என் செல்வியா இப்படிப் பேசுகிறது?"

"நான் செல்வியும் இல்லை அல்லியுமில்லை. இப்போது வெளியில் போகிறாயா, போலீசைக் கூப்பிடட்டுமா?"

"நிச்சயமாய் என்னைத் தெரியவில்லையா?"

"நீ யாரோ, தெரியாது! போ, உடனே!"

"செல்வி, உன் அந்தஸ்து உன் கண்ணை மறைக்கிறது. நான் போகிறேன்."

அவன் போய் விட்டான். உயிருக்குயிராயிருந்த செல்வி இன்று தன்னைக் கணவன் இல்லை என்றே சொல்லிவிட்டாள். மணமான புதிதில் அவள் காட்டிய அன்பு இப்பொழுது எப்படி மாறியது? அவளுடைய அந்தஸ்தே காரணம். அவன் மனம் உடைந்து விட்டது.

தெருவில் போய்க் கொண்டே இருந்தான். தெருக் கோடியில் ஒரு பிச்சைக்காரனும் பிச்சைக்காரியும் உட்கார்ந்து கொண்டு இருந்தார்கள். அந்தப் பிச்சைக்காரன் குருடு. அவர்கள் சிரித்துக் கொண்டே கையிலிருந்த சோற்றைத் தின்று கொண்டிருந்தார்கள்.

"ஏனம்மா உன் கணவன் குருடா?"

"ஆமாங்க!"

"பின்னே ஏன் இவனைக் கட்டிக்கொண்டு மாரடித்துக்கொண்டிருக்கிறாய்?"

"அதென்னங்க அப்படிச் சொல்லிவிட்டீங்க! 'குருடோ இருடோ அவர் என் புருஷன் இல்லீங்களா? கல் என்றாலும் கணவன், புல் என்றாலும் புருஷனில்லையா?' நானே அவரை அலட்சியம் செய்தால் அவருக்கு வேறு நாதி ஏதுங்க?" என்றாள்.

குருடனானாலும் அவன் தன்னுடைய கணவன் என்ற உரிமையை விடாத அந்தப் பிச்சைக்காரியையும் தாலி கட்டிய கணவனையே கணவன் இல்லை என்று சொல்லிய செல்வியையும் எண்ணிப் பார்த்தான் சிங்காரம்.

செல்வியைப் பற்றிக் குறைப்பட்டு என்ன பயன். இதற்குக் காரணம் அவளுடைய அந்தஸ்தும் பணமும்தான். பணம், செய்யும் பயங்கர வேலைதான் இது.

இந்தப் பணம்தான் கொண்ட கணவனையே கணவன் என்று அங்கீகரிக்க மறுக்கிறது.

தன் ஆசைச் செல்விக்கு ஆவலோடு வாங்கி வந்த புடவையை அந்தப் பிச்சைக்காரியிடம் கொடுத்தான். சஞ்சல முற்றிருந்த அவன் உள்ளம் நிம்மதி யடைந்தது.

## 3

"ஏய்! நாற்பத்திநாலு. என்ன இப்படி இன்றைக்கு இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாயே? உனக்கு விடுதலை ஆகிவிட்டது. நீ போகலாம்!" என்றார் சிறை அதிகாரி.

சிங்காரம் திடுக்கிட்டு எழுந்தான். ஒரு முறை கண்ணைக் கசக்கிவிட்டுக் கொண்டான். 'நல்லவேளை, நாம் இதுவரை கண்டது கனவுதான்போலிருக்கிறது! என் செல்வி என்னைப் புறக்கணிப்பாளா? ஒரு நாளும் மாட்டாள்' என்று நினைத்துக் கொண்டே விடுவிடென்று வெளியில் வந்தான் சிங்காரம்.

சிறை வாசலில் ஒரு பெரிய கார் நின்று கொண்டிருந்தது. அதில் பிரபல சினிமா நட்சத்திரமான சசிகலாதேவியே உட்கார்ந்திருந்தாள். ஒரு ஆள் அந்தக் காரின் கதவைத் திறந்து அதில் சிங்காரத்தை ஏறச் சொன்னான். சிங்காரத்துக்கு ஒரு கணம் ஒன்றும் புரியவில்லை. வாய் பேசாமல் ஏறினான்.

உள்ளே இருந்த நடிகை சசிகலாதேவி, "அத்தான்! என்னைத் தெரிகிறதா? நான்தான் உங்கள் செல்வி" என்று கூறி அவனை அணைத்துக் கொண்டாள். சிங்காரம்! தன்னையே மறந்தான்! அவன் தலை சுழன்றது. கார் வேகமாகப் பறந்தது.

காலப்போக்கில் சிங்காரம் செல்வநாயகமாகிப் பிரபல படமுதலாளியாகி விட்டார்.




"இதோ பார்த்தாயா ஹேமா! இந்த நெக்லேஸ் நன்றாயிருக்கிறதா!" என்று ஹேமாவைக் கூப்பிட்டுப் புதிதாக வாங்கி வந்த வைர நெக்லேஸைக் காட்டிக் கேட்டான் ராமநாராயணன்.

"நான் உங்களிடம் எத்தனை தடவைகள் சொல்வது! நகை, நகை யென்று ஏன் இப்படிக் காசை வீணாக்குகிறீர்கள். இருக்கிற நகைகள் போதாதா! மேலும் எதற்கு இந்தச் சுமை!" என்று அடித்துக் கொண்டாள் ஹேமலதா.

"கடைக்குப் போனேன். இது கண்ணைப் பறித்துக்கொண்டிருந்தது. இதை உன் கழுத்தில் போட்டுப் பார்த்தால் எவ்வளவு அழகாக இருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன். உடனே வாங்கி வந்துவிட்டேன். இந்தா, இதைப் போட்டுக் கொள். உன் அழகு எப்படிப் பிரகாசிக்கிறதென்று பார்க்க வேண்டும்" என்று கூறி அந்த வைர நெக்லேஸை அவள் கழுத்தில் அணிவித்தான்.

ஹேமலதாவின் அழகு அந்த நெக்லேஸின் பளபளவென்னும் மின்னும் காந்திக்கு மேல் ஜகஜ்ஜோதியாய்ப் பிரகாசிப்பதைக் கண்டு சந்தோஷத்தை அடக்க மாட்டாதவனாய், "ஹேமா, இந்த வர்ண ஜாலத்தை வாரி யிறைக்கும் நெக்லேஸினால் உன் அழகு மேலும் பிரகாசிக்கிறது" என்று எக்காளத்துடன் கூறினான்.

ஹேமலதாவுக்கு அவனுடைய புகழ்ச்சிப் பேச்சுக்களைக் கேட்டுப் புளகாங்கித மூண்டாகியது. அவள்மேல் ராமநாராயணன் வைத்திருந்த அன்பு, பிரேமை, காதல் எல்லாவற்றையும் எண்ணும்போது அவள் மிகவும் பெருமித மடைந்தாள். இருந்தாலும் அதையெல்லாம் வெளிக் காட்டிக் கொள்ளாமல், "என்னவோ, உங்கள் காவிய பாஷை யெல்லாம் எனக்குப் புரியவில்லை. நகை நன்றாய், கவர்ச்சிகரமாய்த்தான் இருக்கிறது. ஆனால் அழகாய் இருக்கிறதென்று நினைத்ததை யெல்லாம் வாங்கி விடுகிறதா என்ன! எதற்கும் அளவில்லையா! இதுவரை நீங்கள் இந்த இரண்டு வருடங்களாய் வாங்கிக் கொடுத்திருக்கும் நகைகளை வைக்கவே இடமில்லையே!" என்று மெதுவாகக் கடிந்து கொண்டாள்.

"ஹேமா என்ன விசித்திரமான பெண்ணாக இருக்கிறாய் நீ. உலகத்தில் பெண்கள் எல்லாம் நகை, நகை என்று பறக்கிறார்கள். ஊர்க் கடைகளில் இருக்கும் அத்தனை நகைகளும் வந்து குவிந்தாலும் திருப்தியடையாத பெண்கள் வாழும் இந்த நாட்டில் நீ அபூர்வமாகப் பிறந்திருக்கிறாயே! நீ கேட்காமல் நானாகவே உனக்கு ஆசையுடன் நகைகளை வாங்கி வந்தால் நீ இப்படிப் பேசுகிறாயே!" என்றான் ராமநாராயணன்.

"அதற்காகத் தினமும் ஒரு நகை வாங்குவதா என்ன! இப்படி வாங்கினால் குபேரன் பணமானாலும் கரைந்து போய் விடுமே."

"பணத்தைப் பற்றி ஏன் கவலைப்படுகிறாய் ஹேமா. பணம் இல்லையானால் நான் ஏன் இவைகளை வாங்குகிறேன். கடவுள் கிருபையால் நமது வியாபாரம் செழித்து வளர்கிறது. பணம் ஏராளமாய்ப் புரள்கிறது. 'நீயும் நானுமடி, எதிரும் புதிருமடி' என்று இரண்டே பேர்கள்தான் இருக்கிறோம். நாம் வேறு யாருக்குக் கொடுத்து என்ன செய்ய வேண்டும்!"

ஹேமலதா மகா விசித்திரமான பெண். அவள் ஒரு சாதாரண மத்தியதரக் குடும்பத்தில் பிறந்தவள். அவளுடைய தகப்பனார் ஒரு சிறு கம்பெனியில் நூற்றைம்பது ரூபாயில் உத்தியோகம் பார்த்து வந்தார்.

ஹேமலதா வெகு புத்திசாலி. ரொம்பவும் சாது. காலேஜிலும் அவள் எல்லாவற்றிலும் முதலாவதாக விளங்கினாள். அவளுக்கு மேல் வகுப்பில் ராமநாராயணன் படித்து வந்தான். அவனும் அவனுடைய வகுப்பில் எல்லா பாடங்களிலும் முதல். ஹேமலதாவின் அடக்கமான சுபாவமும் புத்திசாலித்தனமும் அவனை மிகவும் கவர்ந்து விட்டன. கல்யாணம் செய்து கொண்டால் ஹேமாவைத்தான் கல்யாணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டான்.

ராமநாராயணன் பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். ஆனால் தாய் தகப்பனாரை இழந்தவன். அவனுடைய மாமா அவனுடைய சொத்துக்களைப் பராமரித்து அவனையும் விருத்திக்குக் கொண்டு வந்தார். அவனுக்குத் தக்க வயது வந்ததும் அவனிடம் சொத்துக்களை ஒப்படைத்து விட்டு அவன் இஷ்டப்படி ஹேமலதாவைக் கலியாணமும் செய்து வைத்தார்.

அவனுடைய மர ஆலை நன்றாக வேலை செய்து கொண்டிருந்தது. ஏராளமாக லாபத்தைக் கொடுத்துக்கொண்டிருந்தது.

ராமநாராயணனுக்கு ஹேமலதாவின் அழகில் மிகவும் பெருமை. அவளை விதவிதமாய் அழகு பார்த்து மகிழ வேண்டுமென்று ஆசைப்பட்டான். அதனால் அவன் கடைத் தெருவில் எந்த நகை, புடவையைக் கண்டாலும் வாங்கி விடுவான். பணத்தைப் பற்றித் தான் கவலையில்லையே!

ஆனால் அவனுடைய ஆசைகள், நோக்கங்கள், கொள்கைகள் அத்தனைக்கும் எதிர்மாறாக இருந்தாள் ஹேமலதா. இருவரிடையே உள்ள காதல், அன்பு இவைகளில் எவ்வித பேதமுமில்லையென்றாலும் ராமநாராயணனுடைய படாடோபம்,

ஆடம்பரம் இவைகளை முதலிலிருந்தே வெறுத்தாள். ஆனால் ராமநாராயணன் தினம் முத்து மாலையோ வைர நெக்லேஸோ பட்டுப் புடவையோ ஏதாவது வாங்கிவந்த வண்ணமிருந்தான்.

தான் வாங்கி வந்தவைகளைத் தினசரி மாற்றி மாற்றிப் போட்டுக் கொள்ளும்படி கூறுவான். அவளுக்கு அவனுடைய இந்த நச்சரிப்பு பெரிய தலைவேதனையாக இருந்தது.

ராமநாராயணன் விடாமல் தான் பிடித்ததைச் சாதித்து வந்தான். அவனுடைய உள்ளம் புண்படக் கூடாதே, அவன் ஆசை தீரட்டுமே என்று அவள் முதலில் அடங்கி அவன் இஷ்டப்படி அலங்காரம் செய்து கொண்டாள்.

ஹேமலதாவின் தோழிகள் அவள் நாளுக்கொரு விதமாக நகை, புடவைகளை மாற்றி அலங்காரம் செய்து கொள்வதைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். அவள் அவைகளைச் சாமர்த்தியமாக, ஒன்றோடொன்று ஜோடி சேரும் விதமாகப் பொறுக்கி எடுத்து அணியும் விதத்தைக் கண்டு மூக்கின் மேல் விரலை வைத்தனர்.

முதலில் அவைகளையெல்லாம் வேண்டா வெறுப்புடன் சகித்துக் கொண்டாள். நாளடைவில் அவள் தானே விதம் விதமாகத் தன்னை அழகுபடுத்திக்கொண்டு பலவித கோணங்களில் நிலைக் கண்ணாடிக்கு முன்பு நின்று கொண்டு அழகு பார்த்து மகிழ்ந்து கொள்வாள். வைரம் மின்னுவதைக் கண்டு அதில் அழகு அள்ளித் தெறிப்பதைப் பார்த்துப் பூரிப்பாள். விதம் விதமாக உடை உடுத்தி நகைகள் போட்டுக் கொண்டால் உண்மையாகவே அவளுடைய இயற்கை யழகு மேலும் பிரகாசிப்பதாகத் தெரிந்தது. இத்தனை நாட்கள் ராமநாராயணன் அவளை வற்புறுத்தி அலங்கரித்துக் கொள்ளச் செய்வது போய்த் தானாகவே ராமநாராயணன் தன் காரியாலயத்திலிருந்து வரும்போது கவர்ச்சிகரமாக விளங்கி மகிழ்ச்சியை உண்டுபண்ணினாள்.

முன்பெல்லாம் தலைமயிரை வகிடு எடுத்துக் கொள்வதற்கும், திலகம் வைத்துக் கொள்வதற்கும் தவிர வேறு சமயம் கண்ணாடியைப் பார்க்கக் கூசியவளுக்கு இப்போது சதா நிலைக் கண்ணாடி முன் நின்று அழகுபடுத்திக் கொள்ளவே பொழுது முழுதும் கழிய ஆரம்பித்தது.

ராமநாராயணனுக்கு அவளுடைய முன்னேற்றம், மாறுதல் எல்லாம் மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தன. "இப்போது எனக்கு எவ்வளவு திருப்தியாக இருக்கிறது தெரியுமா!" என்று அவளை மெச்சி மகிழ்ந்தான்.

இப்போதெல்லாம் நகையோ, புடவையோ எதை வாங்கினாலும் இருவருமாகவே சென்று வாங்கிவர ஆரம்பித்தார்கள்.

ராமநாராயணனுடைய மர ஆலை ஒன்று தான் இத்தனை நாட்களும் ஏகபோகமாக இருந்து வந்ததால் அவனுடைய மில் பிரமாதமான லாபத்துடன் நடந்து கொண்டிருந்தது.

அவனுக்கு அடிக்கும் யோகத்தைக் கண்ட மற்ற பணக்காரர்கள் தாங்களும் மர ஆலை ஆரம்பித்து விட்டார்கள். முதலில் ஜனங்கள் ராமநாராயணனுடைய கம்பெனியில் நம்பிக்கை வைத்துக் கொண்டிருந்தாலும் நாளடைவில் புது மில்லில் சாமான்கள் வாங்க ஆரம்பித்தனர். ராமநாராயணனுடைய தொழில் மந்தமடைந்து விட்டது.

அவன் கூட்டாளிகள் வேறு துரோகம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அதன் காரணமாக அவனுடைய ஆலை சிறிது காலத்தில் மூடப்பட்

# பாரதி காட்டிய பாதை

## (கட்டுரைப் பரிசுப் போட்டி)

### பரிசு ரூ. 100-ம் தங்கமெடலும்

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கட்டுரைகள் பாரதியார் பாடல்களிலிருந்தோ வசன நூல்களிலிருந்தோ ஊக்கம், உற்சாகம், உழைப்பு, முயற்சி, மனோதைரியம், நன்னம்பிக்கை — இவற்றை வற்புறுத்தும் சில வரிகளைப் பொறுக்கி எடுத்து அதை ஆதாரமாகக் கொண்டதாக இருக்க வேண்டும்.

2. கட்டுரைகளின் நீளம் "கல்கி" பத்திரிகையில் இரண்டு பக்கம் முதல் மூன்று பக்கத்துக்குள் அடங்குவதாயிருக்க வேண்டும்.

3. "கல்கி" வாசகர்கள் அனைவரும், புருஷர்களும், பெண்மணிகளும் சிறுவர் சிறுமிகளும் இலங்கை, பர்மா முதலிய வெளிநாடுகளில் உள்ள தமிழ்ச் சகோதர சகோதரிகளும் இந்தக் கட்டுரைப் போட்டியில் சேரலாம்.

4. பொதுவாக முதற்பரிசும் தங்கமெடலும் அளிக்கப் படுவதைத் தவிர மாணவர்களால் எழுதப்படும் சிறந்த கட்டுரைக்கு மற்றொரு விசேஷப் பரிசு, நூறு ரூபாயும் தங்கமெடலும் அளிக்கப்படும்.

5. ஹைஸ்கூல் மாணவர்களும், காலேஜ் மாணவர்களும் இந்த விசேஷப் பரிசைப் பெறுவதற்கு முயற்சி செய்யலாம். ஆகையால் கட்டுரை எழுதும் மாணவர்கள் தங்கள் விலாசத்துடன் படிக்கும் வகுப்பு, பள்ளிக்கூடம், கலாசாலை இவற்றைக் குறிப்பிட வேண்டும்.

6. நாளது 1952-ம் வருஷம் மே மாதம் 31-ந் தேதிக்குள் போட்டிக் கட்டுரைகள் கல்கி காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின்மேல் கட்டுரைப் போட்டி என்று குறிப்பிட வேண்டும்.

7. பரிசு பெறாத கட்டுரைகளைத் தவிர, பிரசுரத்துக்குத் தகுதியான கட்டுரைகள் பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். அக்கட்டுரைகள் ஒவ்வொன்றுக்கும் பதினைந்து ரூபாய் சன்மானம் அளிக்கப்படும்.

8. முதற்பரிசு பெற எந்தக் கட்டுரையும் தகுதியற்றதென்று கருதப்பட்டால் பரிசுத் தொகையை உசிதம்போல் பிரித்துக் கொடுக்கப் படும்.

9. இந்தப் போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

10. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

மானேஜர் : "கல்கி" : கீழ்ப்பாக்கம் : சென்னை

டது. மிஞ்சியது அவன் பங்களா, கார், மனைவியின் நகைகள்தான். முன்போல் அவன் மறுபடி புதிய தொழிலை ஆரம்பித்து நடத்தச் சக்தியில்லாமல் போகவே இருப்பதைக் கொண்டு ஜீவனம் நடத்த வேண்டியிருந்தது.

ராமநாராயணன் குணமே அலாதி. ரொம்பவும் பக்குவமடைந்தது. இருக்கும் போது நாளைக்கு என்று கவலைப்பட மாட்டான். இல்லாத போது இல்லையே என்று ஏங்கவும் மாட்டான். அம்மாதிரி தன் சூழ்நிலைக் கேற்றவாறு சட்டென்று மாறிக் கொள்ளும் சக்தி படைத்திருந்தான். ஆகவே ஆலையை மூடி விட்டதால் அவன் கவலைப்படவில்லை. எப்போதும் போல் இருந்தான்.

ஆனால் ஹேமா அப்படி இல்லை. அவள் முதலில் வெகு சாதாரணமாகத்தான் இருந்தாள். ராமநாராயணன் மெதுவாகக் குளவி போல் கொட்டிக் கொட்டி நாகரிகமாகவும், டாம்பீகமாகவும் அவளைச் செய்து விட்டான். அவள் முன்பு எவ்வளவுக் கெவ்வளவு அலங்காரங்களை வெறுத்தாளோ, அவ்வளக் கவ்வளவு இப்போது அவைகளின் மேல் பெருமோகம் கொண்டு விட்டாள்.

ஆனால் இப்போது ஆலை மூடப்பட்டு வருமானம் நின்று விடவே முன் போல் நகை, நட்டு என்று வாங்கி அழகு படுத்திக் கொள்ள முடியாமல் போய் விட்டது. ஹேமாவுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. ராம நாராயணன் பாங்கில் இருந்த பணத்தை வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகக் காலம் கழித்து வந்தான். நாளடைவில் பாங்கில் இருந்த பணமும் காலியாகிவிடவே ஹேமலதாவின் ஆபரணங்களை விற்றுச் சமாளிக்க வேண்டி வந்தது.

அன்று அவன் ஹேமலதாவின் வைர நகையொன்றைக் கேட்ட போது அவள் அவனுடன் சண்டை பிடித்தாள். நகையைக் கொடுக்க முடியாதென்றாள். 'ஹேமா, ஆயிரத்தைந்நூறு ரூபாய் கடன் தரவேண்டும். நான் பணத்துக்கு எங்கே போவது. இருந்ததெல்லாம் போய் விட்டது. உனக்குத் தெரியாதா!'' என்று சொன்னான். ஆனால் அவள் அசையவில்லை. அந்த அருமையான நகையை இழக்க அவளுடைய மனம் ஒப்பவில்லை.

சாயங்காலம் ராமநாராயணன் கால் நடையாக வந்ததைக் கண்டு ஹேமா திடுக்கிட்டாள். 'ஏன், கார் எங்கே!'' என்று கேட்டாள்.

''இல்லை. விற்றுவிட்டேன்'' என்றான்.

ஹேமாவுக்கு அழுகை வந்து விட்டது. அழகான ப்யூக் கார் போய்விட்டது. இனி அவள் தன் சிநேகிதிகளைப் பார்க்க எப்படிப் போவது' கிளப்புக்கு நடந்தா போவது!''

ஹேமலதாவுக்கு வாழ்க்கையே இருண்டு விட்டாற் போல் ஆகி விட்டது. இனி எப்படி வாழ்வது! கார் இல்லை, பணம் இல்லை. இனி நகைகள் ஒவ்வொன்றாய் இழந்து கொண்டே வந்தால்! அவளால் இதை நினைத்துப் பார்க்க முடியவில்லை.

ராமநாராயணன் மட்டும் சந்தோஷமாகவே இருந்தான். ஆனால் ஹேமா விசாரப்படுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ''ஏன் வருத்தப்படுகிறாய். இருக்கும் வரை அனுபவித்தோம். இல்லாத பொழுது அதற்குத் தகுந்தாற் போல் நம்மைத் திருத்திக் கொள்ள வேண்டும். அதுதான் அறிவுடைமை'' என்று ஹேமலதாவைச் சமாதானப் படுத்தினான். ஆனால் ஹேமாவால் முடியவில்லை.

ஆகவே கொஞ்சம் கொஞ்சமாக ஆடம்பர வாழ்க்கை குறைந்து வந்தது. பணமுடை ஏற்பட்ட போதெல்லாம் ஹேமாவின் நகைகளை ஒவ்வொன்றாக விற்க ஆரம்பித்தான் அவன். கார் இல்லாமல் போனதே பெரும் அவமானமாக அவளுக்கு இருக்கும்போது நகைகளும் ஒவ்வொன்றாகப் 'போய் விட்டால் தினம் ஒருவிதமாய் எப்படி அலங்காரம் செய்து கொள்ள முடியும்!

அவள் பெருத்த ரகளை உண்டாக்கி விட்டாள். தினம் விடிந்தால் அவனுடன் விவாதமும் சண்டையும்தான். இனி ஒரு நகையைக் கூடத்தான் விற்கச் சம்மதிக்க முடியாது என்று கண்டிப்பாய்க் கூறினாள். ராமநாராயணன் ''ஹேமா! பணம் வேண்டும். நான் வேறு ஒரு புதிய தொழில் ஆரம்பிக்கப் போகிறேன். ஆபத்துக்கு உபயோகப்படத்தான் நகைகள் இருக்கின்றனவே யல்லாமல் வெறும் அழகு பார்ப்பதற்காக மட்டும் இல்லை. இப்போது நீ இவைகளைத் தர மறுத்தால் நான் இந்த வீட்டை விற்க வேண்டியது தவிர வேறு வழியில்லை'' என்றான்.

ஹேமா பயந்து விட்டாள். ''வீட்டை விற்பதா!'' என்றாள்.

''ஆமாம், வேறு வழி! எவ்வளவு கடன் ஏறி விட்டது தெரியுமா!'' என்றான்.

ஹேமலதாவுக்கு அழுகையாக வந்தது. அழுது கொண்டே இருந்தாள். இதைக் காணச் சகியாமல் ராமநாராயணன் வெளியே சென்று விட்டான்.

* * *

''என்ன அம்மா அழுதுகொண்டே இருக்கிறீர்களே!'' என்று கேட்டாள் வேலைக்காரி.

''ஒன்றுமில்லை'' என்று பதில் சொல்லி விட்டு ''என்னடி இது! கை, காது, மூக்கு எல்லாம் ஒரே மூளியாக இருக்கிறது! உன் நகைகள் எல்லாம் எங்கே!'' என்று கேட்டாள் ஹேமா.

''எங்க வீட்டுக்காரர் ஏதோ புதிய தொழில் ஆரம்பிக்கப் போகிறாராம். இருநூறு ரூபாய் இல்லாமல் கஷ்டப்பட்டார். அவருடைய கஷ்டத்தைவிட எனக்கு நகையா அம்மா பெரிது! எல்லாவற்றையும் கழட்டிக் கொடுத்து விட்டேன்'' என்றாள்.

ஹேமாவின் மண்டையில் ஏதோ ஒன்று தாக்கியது பபோலிருந்தது. அவள் தன் அறியாமையை எண்ணி வருந்தினாள். உடனே தன் அறைக்குச் சென்றாள். தனக்கு வேண்டிய ஒரு செயின், காதில் போட்டுக் கொள்ள ஒரு சாதாரண தோடு, கைக்கு இரண்டு வளையல் இவைகளை மட்டும் எடுத்து வைத்துக் கொண்டு மற்ற நகைகள் எல்லாவற்றையும் எடுத்து ஒரு பெட்டியில் வைத்தாள். தன் கணவன் வருகைக்காக ஆவலோடு காத்திருந்தாள்.

ராமநாராயணன் சோகமே உருவமாகத் திரும்பி வந்தான். அவன் வந்ததுதான் தாமதம். ஹேமா விடுவிடு வென்று உள்ளே சென்றாள். நகைகள் நிறைந்திருந்த அந்தப் பெரிய பெட்டியைத் தூக்க முடியாமல் தூக்கி வந்தது. ராமநாராயணன் காலடியில் வைத்தாள்.

''என்னைத் தயவுசெய்து மன்னித்து விடுங்கள். ஏதோ அறியாமையால் தங்கள் மனம் கோண நடந்து விட்டேன். தங்களுடைய சந்தோஷமே எனக்கு ஏராளமான நகைக்குச் சமானம். இதோ இந்தப் பெட்டி நிறைய நகைகள் இருக்கின்றன. நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்'' என்றாள். அவள் முகத்தில் ஒரு நிறைவு இருந்தது.

ராமநாராயணனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு கணம் திகைத்து நின்றான். அடுத்த கணம் ஹேமலதாவை ஆதரவோடு தழுவிக் கொண்டான்.

**Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press**
**116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras**



# ஹிமாலயா பூக்கே

**டாய்லட், டால்கம் பௌடர்களின்**

**இனிமையான நறுமணத்தை**

**நீங்களும் அனுபவியுங்கள்.**







இரண்டு
நேர்த்தியான
இராஸ்மிக்
தயாரிப்புகள்

HBP. 6-X30 TM

**Regd. No. M 4392**

*Registered as a newspaper in Ceylon*

"என் சருமத்தை **லக்ஸ் டாய்லட் சோப்பினல்தான்** பாதுகாத்துக்கொள்கிறேன்" என்கிறார் மங்களம்




இனிய மணத்துடன் கூடிய இந்த
வெண்மையானதும் சுத்தமானதுமான சோப்
உங்கள் சருமத்தை வசீகரமாகச் செய்யும்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 326-X30 TM